ஓம் பரப்பிரம்மணே நம:

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கி, ஆநந்தத்தைத் தரவல்லதான அநுபவ விநோத ஞான கலா விலாஸங்கள் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் - எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப ; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.) [REGISTERED.

| கமலம்-4. | சென்னை: சுக்கில ஞு ஐப்பசி மீ 1 உ | இதழ்-43 |
|---|---|---|
| Vol. 4. | 1929-ம் ஞு அக்டோபர் மீ 17 உ | No. 43 |




உருவில ளுமமு மூரும் பிறப்பு மற்றொன்றுமிலன்
தெரியிலளுயினு மெய்யறிவோர்மனத் தேர்ச்சியினுட்
பிரிவிலன் பேர்ந்திலன் பேதையரேனும் பிணக்குமிலன்
அரியபிரான் சரணார விந்தத்தை யணுகுவமே.

"இலங்நம் உயிர் உடலனைத்தும் ஈசன் கோயில்." எந்த வஸ்துவும் பகவானைவிட்டுப் பிரிந்திருப்பதாகக் காணப்படவில்லை. பிரகிருதியின் ஒவ்வொரு பதார்த்தத்தின் மேலும் பரமாத்மாவினது அருமையும் அதி யாச்சரியகாமுமான கைத்தொழிற் சிறப்பு எவ்வளவு மனோகாமாயும் விநோதமாயும் விளங்குகின்றது ? ஒவ்வொரு ஜீவஜந்துவின் சரிதைகளினிடத்தும் பகவத்காரிய சின்னத்தைக் கண்ணுறுகின்றோம். உலகின் கண்ணுள்ள எல்லா அழகிய பொருள்களைக் காணுமிடத்தும் நாம் கடவுளிடத்து எவ்வளவு பயபக்தி வைக்கக் கடமைப்பட்டிருக்கிறோ மென்பதை நாமே நிர்ணயிக்க அசக்தராயிருக்கிறோம். இந்தப் பிரபஞ்ச முழுமையும் அலசிப் பார்ப்போம். அதின்கண்ணுள்ள அபரிமித ஜீவஸமூகம் அவ்வவற்றிற் கேற்ற நிலையினின்று உயிர் வாழ்ந்துறங்குவதை நோக்கில் அவ்வள்ளலின் அற்புத சக்தி நம்மனதில் தோன்றாமற் போகுமோ ? நமது சரீரத்தையும், அதின் ஆக்கத்தையும் சற்று ஆழ்ந்து பரி

சோதிக்கையிலும் ஐயனின் அபரிமித சக்தி நன்ருய் விளங்கும். இச்சரீரத்தில் அவ்வவ்விடத்திற் கேற்றபடி பலவித எலும்புகளும், அவற்றிற்குக் கவசமாக ஜவ்வு-சதை-தோல் முதலிய பதார்த்தங்களும், அவை மடக்கவும் நீட்டவும் கீல்களும், அவற்றுள் இரத்தம் உடலெங்கும் பாய்ந்து சரீரத்தைப் பெருக்க இரத்தக் கால்வாய்களும், இரத்தோற்பத்திக்கு இடமாக ரக்தாஶயமும், போஜனத்தைக் கிரஹித்துப் பக்குவப்படுத்தி பாலாக்கியோட்ட இரப்பையும், அந்தப்பாலை ரத்தாஶயத்தில் சேர்ப்பிக்கக் குடல்களும், அந்த இரத்தத்தைப் பரிசுத்தப் படுத்துமிடமாகிய நுரையிரலும், அந்நுரையீரலில் பிராணவாயுவின் பிரவேசமும், புத்தி தங்குமிடமாகிய மூளையும், உணர்ச்சியுடன் வாழப் பஞ்சேந்திரியங்களும் உண்டு பண்ணப்பட்டிருக்கும் சொகுசை என்னென்று கருதக்கூடும்? இன்னும் இந்த சரீர நூலை யுற்றுப் பார்ப்பவருக்கு அவரது அபரிமித சக்தி விளங்குவதுமன்றி ஆநந்தக் கடலில் மூழ்கிப்போவரென்பதில் ஐயமுண்டோ? அவ்வாறே ஸகல ஜந்து பேதத்திற்கும் எற்றபடி குறைகூறவிடமின்றி யமைந்திருக்கும் அவ்வன்மையை எத்தன்மையதெனப் புகழவல்லோம்?

***

**"எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்."** ஜந்து சரீரத்தில் மாத்திரம் அற்புதங்கள் காண்கின்ருே மென்றில்லை. மூலபதார்த்த சரீரத்திலும் இத்தன்மையான அற்புதக் கிரியைகளைக் கவனிக்கலாம். விதை நிலத்திலிட்டவுடன் மூளைவாங்கி, நீரோடு கூடிய பூஸாரத்தை வேர் மூலமாகக் கிரஹித்து, இலைவிட்டு கிளைகள் வீழ்ந்து, வளர்ந்து, பூத்து, காய்த்து, பழுத்து, ஓங்கி, நிழலையும் பலனையும் தந்து உதவுவதைச் சற்று ஆலோசிப்போமாகில் பகவான் அபரிமித சக்தரென்பது விளங்கும். கேவலம் மனுஷிய ஸாமான்னிய கிருத்தியங்கள் ஆகிய ஆவியந்திரம், தந்தி சூத்திரம், கடிகாரம், மின்விசை முதலியவற்றிர்கு எவ்வளவு ஆச்சரியப்படுகிருேம்? இந்த மனிதருக்கு இப்படிப்பட்ட சக்தியையும் யுக்தியையும் அளித்தவன் சக்தி எப்படிப்பட்டதெனச் சொல்லக் கூடும்? ஆ! அந்த அற்புதசக்தியை யாதென்றுரைப்போம்! இந்த ஸர்வ சக்தியாதிகளை மனதிற் கொள்ளின் அவரிடத்து பயபக்தியும், பூஜியதாபுத்தியும் உண்டாகு மென்பதில் சந்தேகமோ! நாம் உலக காரியங்களில் பிரவேசித்திருந்தாலும், அவற்றினின்று ஒழிந்திருந்தாலும், பகவத் தியானத்திலிருந்தாலும், இல்லாவிட்டாலும் எப்பொழுதும் அவரைக்குறித்த யோசனைகள் நமது உள்ளத்தில் பின்னிக் கொண்டிருக்கின்றன.

ஆவலாய் துதிக்கக் கிர்பை மேவி யாளுவாய்
மூவுலகம் புரக்குந் திவ்விய
மூவா! தேவா! எப்போதும் ஏழை— (ஆவலாய்)

சுகுணம்பர ... லோலனே!—சோல்லும் பிரணவ...மூலனே
இகபரந்தனில் தனிக் கோலனே!—எளியோற்கருளு...!
மஙகூலனே! (ஆவலாய்)

---

எவ்வளவு ஹிந்து—முஸ்லிம் பிரிவினை நேரினும், நண்பர்களாயுள்ள ஹிந்துவுக்கும் முஸ்லிமுக்கும் ஒருபோதும் சண்டையில்லை. அவர்கள் தழுவியே நிற்பர். அபிப்பிராய பேதங்களையும் திருத்திக்கொண்டு ஒன்ருவர்,

"கூட்டிவைத்தது குருகடாக்ஷம்" என்பதுபோல, நமது குடும்பத்தில் நம்மைச் சுற்றியிருக்கின்ற பெண்டிரும், மக்களும், தாய்தந்தையரும், சகோதரரும் யாவும் அவன் அருளே யன்றோ? நம்மைச் சேர்ந்த அவர்கள் சுகபோகங்களை யநுபவித்து இனிது வாழ்வதைக் கண்ணுறின், அதை யங்ஙனம் காண இருத்திய கருணை வள்ளலை எண்ணுந்தோறும் நம்மனம் எவ்வளவு பூரிக்கும்? பகவான் நம்மீது இருத்திய வாச்சல்லியத்தை யுணர்ந்து நமது ஹிருதயத்தில் அவரைக் கட்டியணைத்து, அன்புநலம் பெருக உருகித் தியானிக்கக் கடவோம். பகவான் ஸர்வ சுலபனாய் வீற்றிருப்பதினாலன்றோ நமது இன்பம் பெருகி வளருகின்றது. நாம் அதியல்ப புத்தியுடையவரா யிருக்கினும், நாம் அவரை நினைப்பினும், நினைக்காவிடினும் நமது ஹிருதயத்தில் அவர் வீற்றிருப்பது உண்மை. அவரிடத்து அன்பு செலுத்தாத மடமை நம்மதேயாம். அவரது ஜீவதயாபரத்துவத்தை யெங்கணும் கண்டுணரப்படுகையில் அவரிடத்து உறுதியுள்ள நம்பிக்கையை ஏன் கொள்ளக்கூடாது? அந்தோ! நமக்கு அதிசுலபமாகவே அவரது அருளும் ஆதரணையும் கிடைத்திருக்க, அதை யுணர்ந் தொழுகோமாயின் நமது புத்தியும் வாழ்க்கையும் எதற்காகவோ? அக் கருணைக்கடலின்கண் அன்பின்றி யுலகில் வாழ்வதும் ஒரு வாழ்க்கையாகுமோ? பரம்பொருளினிடத்துத் தனது சித்தத்தை நிறுத்தி, தன்னையும் அந்தப் பரம காருணியருக்கு அர்ப்பணம் செய்து அவரது அருளில் கலந்து பேரானந்தத்துடனுய்பவனே பக்தனாவான்.

ஐயனே! வாராய்—கடைக்கண்—அருளி நீ பாராய்
துய்யனே! மாபரிசுத்தனே! மெய்ஞ் ஞான
சோதியே! ஆதியே! நீதிக்கட...லான (ஐயனே)

முற்றிலுஞ் சீராய்—என்பாவம—கற்றி நீ! காராய்
கோற்றவா! பற்பல நாமங்க... ... ளூறழ்ந்த
கோலா! சர்வ வுயிர்க்குயிராய்...நிறைந்த (ஐயனே)

அத்தனும் நீயே!—அன்னை தந்தை—சுற்றமும் நீயே!
இத்தரையினி லென்றன் மனந்... ... தேறிட
ஏங்கிடுமோ பாவி யான்கடைத்... ... தேறிட (ஐயனே)

"என்னுயிரிற் கலந்து கலந்தினிக்கின்ற பெருமா னென்னிறைவன்" அப்பரம காருணியனைத்துதித்து இன்புறுகின்றேன். எதற்கு லக்ஷணமுரைக்க மாட்டாமல் வாக்குப் பின்னிடைகிறதோ, எதையானால் மனதும் அண்ட மாட்டாதோ, அப்படிப்பட்ட பரப்பிரம்மத்தின் ஆநந்தத்தை யறிந்தவன் எப்போதும் பயப்படுகிறதில்லை. ஆகையால் அப்படிப்பட்ட ஆநந்தத்தை நாம் அடைந்து மிருத்தியு பயமின்றி நம்மண்ணலோடு கூடிச் சுகித்து வாழும்படி பலவிதத்திலும் முயல்வது கடமையாயிருக்க, உன்மத்தராய் உறக்கங்கொண்டுழல்வோமாயின், இவ்வரிதான மானிடப் பிறப்பிற்குப் பயனென்னை? அவ் வண்ணல் கருணை வாரிதி, கல்லியாணகுணக் களஞ்சியம், ஆநந்த சாம்பிராஜ்

---

"வேண்டுகிறேன்" என்பது சாதாரணச் சொல். "வேண்டுகி"ன்"றேன்" என்பது தலை வணங்கிச் சொல்லும் வணக்கமான சொல். "ன்" போடுவது அதிக வணக்கத்திற்குக் குறிப்பு. வணக்கம் இருபக்கத்திற்கும் அன்பு ஊட்டும்,

யம், அரூப பரம்பொருள். நமது மனோகாரனும் மௌன குருவாயும் வந்து அகமலரில் வீற்றிருந்தும் அவனை இப்படிப் பட்டவனென்றும், அவனது லக்ஷணங்கள் இன்னவை யென்றும் வரையறுத்து உரைக்க நமது வாக்கு பின்னடைகின்றதே! இந்த மஹா வஸ்துவையல்லவா அன்புடன் நாமடைந்து தொழுது ஆநந்தம் பெறவேண்டும். இதையடையா வரையில் உலகத்துன்ப மிருத்தியுபாதிகள் நமக்கெப்படி நீங்கும்? எவனை நிர்த்தாரணம் செய்து உரைக்கக் கூடவில்லையோ, எவன் நம்மனோஹரனும், வாக்குக்கு அமுதாயும் இருக்கிறனோ, எவனுடைய மகிமைகளை யுன்னி யுன்னி யுகந்துகந்து மனமுமுடலும் பூரித்து கண்கள் ஆநந்த பாஷ்பங்கள் சொரிகின்றனவோ, படைப்பின் அமைப்பையும்—அழகையும்—கண்டு எவனது அற்புத சக்தியை இத்தன்மையதென வெளியிடச் சொற்களின்றி, சக்தியுமின்றிப் பின்னடைகிறோமோ அப்படிப்பட்ட அருட்பெருஞ் சோதியைச் சரணமடைந்து பேரின்பமுறுவோமாகில் அப்புறம் நமக்குப் பயம்தானேது?

எதினாலே பார்க்கிறாயோ, எதினாலே கேழ்க்கிறாயோ,
எதினாலே யினிப்பறிந்தாய், எதினாலே வசனிக்கிறாய்,
எதினாலே முகருகிறோம், எதினாலே யுணருகிறோம்,
எதுவெட்போது, மோட்சரூப, மாகி யிருக்கின்றதுவோ,
எது வகண்டாநந்தரூப, மாகியிருக்கின்றதுவோ,
எது விரண்டற வோன்றாகி, யேக வஸ்துவாயிற்றோ,
எது காலத்திரயத்திலும், என்றும் பொய்யாததுவாமோ
எது வநந்தமாய் முடிவே, யில்லா திருக்கின்றதுவோ

சோபனமே சோபனமே சுபசோபனந் தமிழ்ப்பாட,
என்று அந்த நமதண்ணலைத் துதிக்கக் கடவோம்.

"காதலன்போடு நீர் தூவாக் கண்களே புண்களாமால்." கடவுளை நினைந்து அன்போடும் ஆநந்தபாஷ்பஞ் சொரியாத கண்கள் புண்களாமென்க. கடவுளை சூரியன் தனது கிரணமாகிய கைகளினால் வணங்குகிறான், பட்சிகளெல்லாம் இராகத்துடன் ஆடியும் பாடியும் ஸ்தோத்திரம் செய்கின்றன; மரங்களெல்லாம் மிருதியான மலர்களைச் சிந்தி அர்ச்சனை புரிகின்றன; மற்றப் பூதியங்களெல்லாம் அவைகளுக்குரிய வேலைகளைச் செய்து வாழ்த்துகின்றன; சப்திக்கும் கடலானது ஓசையினால் ஓயாது வாழ்த்திக் கொண்டிருக்கிறது. இப்படியிருக்க, நெஞ்சமே! நீ மட்டும் வாழ்த்தாதிருப்பது என்ன காரணம்? இனியேனும் துதிக்கக்கடவாய். இக்கருத்தைப் பின்வரும் பாடலிற் காண்க.

கதிரவன் கிரணக்கையாற் கடவுளைத் தொழுவான் புட்கள்
சுதியோடு மாடிப்பாடித் துதிசெயுந் தருக்களெல்லாம்
போதியலர் தூவிப்போற்றும் பூதந்தந் தொழில் செய்தேத்து
மதிர்கட லோலியால் வாழ்த்து மனமே நீ வாழ்த்தாத தென்னே?

---

வியாதி, அவசரவிஷயம், ஆபத்தான ஒரு சங்கதி—இவைகளுக்குத்தான் உடனே பதில் எழுதவேண்டுமேயன்றி, வெறுமனே க்ஷேமலாபங்களைக்கேட்டு எழுதும் உபசாரக் கடிதங்கட்கு தபாற்செலவுசெய்தல் அத்தனை அவசியமில்லை.

"ஓ! எங்களப்பனே! அமுதவாரிதியே!" அஞ்ஞானத்தால் எம்மனங்களில் உதிக்கும் குரோதாதி புசல்களை நின் கருணையால் அடக்கி எம் வாழ்க்கை மரக்கலமானது சேதமின்றி யக்கரை சேரும்படி அருள் புரிந்திடுவாய். உலகத்தில் எந்த ஸ்திதியிலிருந்தபோதிலும் அதை நின் பிரஸாதமென வுணரச்செய்து ஸகல கஷ்டங்களையும் பொறுத்து ஸந்தோஷமாய் ஜீவிக்க அநுக்கிரகம் செய்வாய். உலகத்தாருக்குத் தீங்கு செய்யக் கருதாமல், கூடுமாயின் நன்மையே புரிந்து பொறுமைச் செல்வத்தைப் பெற்றுய்யும்படி திருவருள் புரிவாயாக. ஓ! கருணைப்பிரவாகமே! கலியாண குணக்குன்றே! யாம் இதுவரையில் கோபாதிகளால் யாதேனும் துஷ்காரியம் செய்திருப்போமாயின் அதைப்பற்றிப் பச்சாத்தாபத்தோடு அநுதாபப்படும் எங்களை மன்னித்து, அங்ஙனம் நடவாதிருக்க மதியீந்து ரக்ஷிப்பாயாக. ஓ! இன்பப்பெருக்கமே! எட்டாப் பரம்பொருளே! எங்களின் கஷ்ட சுக லாபநஷ்டங்களும் சோதனைகளும் எக்காலத்தில் எவ்வாறிருப்பினும் மனோசாந்தி கொண்டு இன்பமுற்று வாழும்படி கடைக்கணித்தருள்வாயாக. ஓம் தத்ஸத்.

## பழக்க அறிவு.

பழக்கத்தால் உண்டாகும் அறிவுக்கும் புஸ்தகங்களைப் படிப்பதனால் உண்டாகும் அறிவுக்கும் வெகு வித்தியாஸமுண்டு. உலகப் பழக்கத்தை அறியாத ஒருவன் எவ்வளவு அற்ப காரியத்தையும் செய்யவல்லவனாகான். அப்படியே ஒரு நாளும் சேனையை நடத்திப் பழகாதவன் ஒருபோதும் சிறந்த தளகர்த்தனாகான். ஸூக்ஷ்ம புத்தியும் நல்ல ஒழுங்குகள் செய்யவேண்டு மென்னும் ஆவலும் கொண்டவனுக்கு விசேஷ அனுபவமில்லாவிடினும் அந்தப் புத்தியும் ஆவலுமே ஒரு வழிகாட்டியாகிவிடும். சில நாளைப் பழக்கத்திலேயே அவன் போதிய தேர்ச்சிபெற்று விடுவான். யாவரும் ஒத்துச் சுகமாய் வாழ்வதற்குச் செய்யவேண்டிய காரியங்கள் பலவாறுயிருப்பதால், அதற்கு வேண்டிய ஒழுங்குபாடும் ஒரேவிதமாயில்லாமல் அந்தக் காரியங்களுக்குத் தக்கபடி பலவிதமா யிருக்கின்றன. இவ்விதம் ஒரு ஒழுங்கை அமைத்துக்கொண்டு வேலைசெய்வதற்கு அதற்கேற்ற அநுபவமும் பழக்க அறிவும் தேவை. அது பழகியே பெறவேண்டும். படிப்பொன்றினாலேயே பெற்றுவிட முடியாது.

"அமிர்தகுணபோதினி"யின் ஒவ்வொரு பக்கத்திலுள்ள ஒவ்வொரு வரியும் உங்கள் நெஞ்சில் நன்குபதிகின்றதா? அவ்விதம் பதியத்தக்கபடி அநுபவ ஆற்று கலந்து சுலபமாய் விளங்கும்வாறாக இனிமை ததும்ப வரையப்படுகின்றதல்லவா? எங்களுடைய இந்தப் பிரயாசைக்கு ஒருபுதிய சந்தாதாரரைச் சேர்த்துக்கொடுக்கும்படி வேண்டுகிறோம். அது ஒரு பெரிய உபகாரம்,

அமிர்தகுணபோதினி

சுக்கிலஹு ஐப்பசிமீ 1வ

# காலிலியோவின் சாஸ்திராபிவிர்த்தி.

## அவர் பட்டபாடு ; விளக்கின் பக்கத்திலே இருள் !



ச்சரியம், ஆச்சரியம் ; ஆகவில்லை தாற்பரியம்; விளக்கின் பக்கத்திலே இருளா? தனது கலாநிபுணத்துவத்தின் மகிமைப் பிரதாபத்தை யுணராத மந்தமதிகளின் மத்தியிலே ஒரு சிறந்த கல்விமானைக் கடவுள் வைத்துவிடுகின்றார். அக்கசடர்களின் இடையிலேயே கற்றோனின் காலம் கழிகின்றது. அவன் பெருமையை யறிவாரில்லை ; மதிப்பாருமில்லை. இன்னும் அவனைச் சிறுமைப்படுத்திச் சீறுதற்கே துணிகின்றார் சுற்றிலுள்ளோர்! கலையிற் பெருத்த அவன் ஒருத்தனாய்த் தனித்து வருத்தமாகிறான். ஏமாறி மாறுகிறான். காணாத அநுபவம் காண்கிறான். புதிய துன்பம் புகுகின்றது. சென்றது கருதிச் சிந்தை நைகின்றான். கற்றதுங் கேட்டதும் போக்கிலே போகவிடவோ என்கிறான். கண்ணீர் பெருக்குகின்றான். துணையில்லை, உதவியில்லை, ஓசையில்லை ; தான் ஏவலிட எவருமே அருகிலில்லை. எனினும், அவன் தனது தளரா முயற்சியை மறப்பது மட்டும் கிடையாது. இத்தகையோரிற் காலிலியோவும் ஒருவர்.

***

மனிதர்களுடைய சரித்திரங்களில், பிற்காலத்தில் ஜனங்கள் ஒருநாளும் மறவாமல் கருத்தில் தரித்துக்கொண்டிருக்கும்படியான ஒவ்வொரு விசேஷம் ஒவ்வொரு காலத்தில் நடப்பதுபோல், சாஸ்திர விஷயங்களிலும் ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு அதிசயங்கள் தோற்றுவது உண்டு. ஒவ்வொரு காலத்தில் புதிதாய் ஆவேசமுண்டாகி அறிவு மேன்மேலும் அபிவிர்த்தியாகவும், நெடுநாளாகச் சோம்பலாய்க் கிடந்த மானிடர்களுடைய மனங்கள் திடீரென்று விழித்துக்கொண்டு வெகு ஆவலாய்த் தாமே வேலைகளிற் புகும்படியாகவும், அப்படி மேன்மேலும் பயின்றுகொண்டு போகையில், சாஸ்திரப்பயிற்சி செய்யத்தகுந்த நிலையும் வழியும் அமையும்படியாகவும் ஒவ்வொரு தருணங்கள் நேரிடுவதுண்டு. அப்படிப்பட்ட தருணமொன்று 1582-ம் வருஷத்தில் ஆரம்பமாயிற்றென்று சொல்லலாம். அக்காலத்திலேதான் யந்திர சாஸ்திரத்தைக்

---

நமது அறிவை நாம் எப்படியெல்லாம் வளர்க்கிறோமோ அதற்குத் தக்கவாறெல்லாம் அது வளர்ந்து நமக்கு உதவியாகும்படி ஓயாது பயிற்சி செய்து பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும். இது நெடுநாள் முயற்சியில் ஆவது.

கண்டு பிடித்தவரும், சோதிட சாஸ்திரத்தை நிலைநிறுத்தினவருமான காலிலியோ இத்தாலி தேசத்தில் பைசாநகரத்திலே 1564-ம் வருஷம் பிப்பிரவரிமீ 15-ம் தேதி பிறந்தார். எவரும் பிறக்கும்பொழுது சாதாரண குழந்தை வடிவங்களே!

***

காலிலியோ வாலிபத்திலேயே வெகு சாதுரியமாய் யந்திரங்கள் கற்பனை செய்வதில் மிகவும் திறமையுடையவரா யிருந்தார். இவர் பிளாரென்ஸ் என்னும் பட்டணத்தில் உயர்ந்த புஸ்தகங்கள் வாசிக்க ஆரம்பித்தார். ஆயினும், அவருடைய குடும்பத்தின் ஈனஸ்திதியினால் அவ்விடத்தில் பெரும் பிரயோசன முண்டாகும்படிப் படிக்கக்கூடவில்லை. என்றாலும், அந்த ஈனமான படிப்பையும் அவர், தமக்குப் பிற்காலத்தில் மிகுந்த பாண்டித்திய முண்டாவதற்கு அது ஒரு உறுதியான அடிப்படையா யிருக்கும்படி, நன்றாய் ஊக்கத்தோடு வருந்திப் படித்தாராதலால் மிகத் திருத்தமாயும் சமத்க்ராமாயும் தட்டுத் தடையில்லாமல் பேசவும் எழுதவும் திறமை யுண்டாயிற்று. கல்வியில் தேர்ச்சிகொள்ள விரும்புவோர் இதைக் கவனிக்கக் கடவர். ஒழிவு வேளைகளிற் பாடவும் சித்திர மெழுதவும் பயின்று அவ்விரண்டிலும் நல்ல வல்லமையடைந்தார். அவற்றின் பயிற்சியை அவர் ஆயுளளவும் விடாமற் கையாடினர். இளமையிலேயே அவருடைய சாமர்த்தியங்களெல்லாம் வெளிப்படவே, அவருடைய தந்தையார் எந்த வருத்தமாவது பட்டு இவனை ஒரு சிறந்த வித்தியாசாலையில் படிப்பிக்க வேண்டுமென்று தீர்மானங் கொள்ளும்படியாயிற்று. அப்படியே காலிலியோ 1851-ம் வருஷம் நவம்பர்மீ 5-ம்தேதி பைசா நகரத்து வித்தியாசாலையில் ஒரு மாணாக்கனாய்ப் பிரவேசித்து வைத்தியசாஸ்திரம் முதலிய சிலவற்றைக் கற்பதும், இன்னும் வேறு விஷயங்களில் ஒருவருக்கொருவர் சர்ச்சை செய்வதுமா யிருந்தார்.

***

இப்படியிருக்குங் காலையில் 1582-ம் வருஷத்தில் காலிலியோ முதல் முதல் சிறந்த விஷயமொன்றைக் கண்டு பிடித்தார். அதாவது ஒருநாள் பைசா நகரத்துப் பெரிய கோயிலுக்குப் போனபோது, அங்கே மேல்மாடியிலிருந்து கட்டித் தொங்கவிட்டிருந்த விளக்கொன்று ஒரே அளவாய் முன்னும் பின்னும் ஊசலாடுவதுபோல் ஆடக் கண்டார். அப்போதுதான் ஒருவன் வந்து தீபமேற்றிப்போன அதிர்ச்சியினால் அந்த விளக்கு அப்படிச் சற்றே ஆடிக்கொண்டிருந்தது. அது அற்ப விஷயமாகட்டும், பெருத்த விஷயமாகட்டும்; அந்த விளக்கு அப்படி ஒரு நிலையாய் ஆடுவதைப் பார்த்தவுடனே அவர் அவ்விஷயத்தைப் பல தடவை பரிசோதனை செய்து திடப்படுத்தி இதைக் கொண்டு காலத்தைச் சரியாய் அளந்தறியக் கூடுமென்று அதன் உபயோகத்தையும் உடனே தெரிந்துகொண்டார். இந்த விஷயம் நெடுநாள் அவர் மனதுக்குள்ளேயே நிலைகொண்டிருந்தது. அப்படியிருக்க, ஐம்பது வருஷத்திற்குப் பிறகு 1633-ம் வருஷத்தில் சோதிட சாஸ்திர சோதனை செய்வதற்

---

ஒப்பாரிப் பாட்டுகள் ஓசையாய்ப் பாடுவார்,
ஓயப்படுத்தினாலும் ஓயாமனீடுவார்,
அப்பாவே, ஐயாவே யெனப்பாடக் கூடுவார்,
ஆண்பிள்ளைகட்குமுன் னாடவுநாடுவார்.

காகக் கடிகாயந்திரம் செய்ய அதை உபயோகித்தார். ஆனல், அது அப்பொழுது அவ்வளவு திருத்தமான கருவியாகத் தீரவில்லை யென்று தோன்றுகிறது. பின்பு பெண்டுலம் என்னும் கருவியோடுகூடிய திருத்தமான கடிகாயந்திர மொன்று செய்யப்பட்டது. அது காலிலியோவின் திறமையினலல்ல; ஹைஜன்ஸ் என்பவருடைய திறமையின லென்றாலும், முதல் முதல் அந்தக் கருத்தைச் சாஸ்திரிகளுடைய மனதிற் புகச்செய்தவர் காலிலியோவே யொழிய வேறெருவருமல்லர்.

***

இதுவரையில் காலிலியோ கணித சாஸ்திரத்திற் பயிலவில்லை. பின்பு கணித சாஸ்திரத்தினல் சித்திரப் பயிற்சிக்கு உதவியுண்டென்று கண்டு, அதைக் கற்க வேண்டுமென்று அபேக்ஷையுடையவராகி, அங்க கணிதமும் க்ஷேத்திர கணிதமும் பயில ஆரம்பித்தார். பின்பு அவர் கண்டு பிடித்த விஷயங்களால் அவர் அடைந்த பெரும் பிரஸித்தி காரணமாக இருபத்தைந்து வயதில் பைசா நகரத்து வித்தியாசாலையில் கணித சாஸ்திர பண்டிதராக நியமிக்கப்பட்டார். உயர நோக்கிச் செல்லும் எவ்வகை எடையுள்ள பொருளும் பூமியின் மத்தியிலுள்ள கவர்ச்சியால், ஒரே விதமாகவே பூமிக்கு இழுக்கப்படுகின்றதென்றும், உயரப்போகிற பொருள்கள் சிறிதும் பெரிதுமானலும் அவை ஆகாயத்தில் ஒரே தூரத்தில் ஒரே அளவான காலத்திலேயே செல்லும்; ஆனல், வாயுமண்டலத்தின் தடையினல் சிறிதளவு வித்தியாஸம் உண்டானல் உண்டாகுமென்றும் நிரூபித்துக் காட்டினர். இவ்விதம் அவர் காண்பித்த பல புதிய சித்தாந்தங்களை ஒருவரும் நம்பி ஏற்றுக் கொள்ளவில்லை, அநேகர் எதிர்க்கவும் தொடங்கியதால், பைசா நகரத்தில் இருக்க மனமில்லாமல் 1592-ம் வருஷத்தில் தனது பண்டித பதவியை விட்டுவிட்டு பிளாரென்ஸ் நகரத்துக்குப் போகும்படியாயிற்று.

***

பிளாரென்ஸ் நகரத்திலிருந்த காலத்தில் பைசா நகரில் இருந்ததைவிட அதிக சுதந்திரமா யிருந்துகொண்டு கணித விஷயமாயும் யந்திர விஷயமாயும் பல சிறு புஸ்தகங்கள் எழுதினர். மிகவும் உபயோகமான பற்பல விஷயங்களை நூதனமாய்க் கண்டு பிடித்தார். தெரியாமலிருந்த அநேக விஷயங்களைத் தெரியக் காட்டினர். தேர்மாமீட ரென்னும் சீதோஷ்ணங்களை அளக்கும் ஒருவிதக் கருவியையும், கம்பஸ் என்னும் ஒருவித அளவுக் கருவியையும் ஏற்படுத்தினர். 1604-ம் வருஷத்தில் புதிதாய் நக்ஷத்திரமொன்று ஆயுலிய நக்ஷத்திரத்தைச் சேர்ந்ததாய் மிகவும் அற்புதமான பிரகாஸத்தோடு திடீரென்று ஆகாயத்தில் காணப்பட, காலிலியோ அதை நன்றாய்

---

என்ன ஜோசியம் சோன்னீர் ஐயரே—எனக்
கேளனஞ் செய்வித்தீர் பொய்பரே.
சோதிடத்தை நம்பிச் சுகப்பட்டதோ யில்லை,
கண்டாரிதை நம்பிப் படுவார் வேகு தொல்லை,
வேதியரே யிப்போ திளிக்கிறீரே டல்லை,
வேதனை யிதைவிட வேறென்று மெமக்கில்லை, (என்ன)

ஆய்ந்து பார்த்து, இது ஆகாயத்தில் மற்றக் கிரகங்கள் எல்லாவற்றை யும்விட வெகு தூரத்தில் இருக்கிறதென்று எடுத்துக்காட்டினர். அப்படி அவர் எடுத்துச் சொன்னது கிறிஸ்தவருடைய மதக்கோட்பாட்டுக்கும், நக்ஷத்திர மண்டலத்தில் ஒருபோதும் ஒருவிதமான மாறுபாடும் உண்டாவ தில்லை யென்னும் அரிஸ்தோதலினுடைய கொள்கைக்கும் விரோதமா யிருக் கவே, அங்கிருந்த மற்றச் சாஸ்திரிகளுக்கும் அவருக்கும் அதைப்பற்றி மனஸ் தாபம் உண்டாயிற்று.

***

உலகத்திற்கு மிகவும் உபயோகமான தூரதிருஷ்டிக் கண்ணாடியும் நக்ஷத்திர மண்டலத்தை ஆராய்வதற்கு அது செய்யும் உதவியும் 1609-ம் வரு ஷத்தில் கண்டறியப்பட்டது. இவ்விதமான கருவி யொன்று முதல் முதல் உலாந்தாக்காரன் ஒருவனால் செய்யப்பட்ட தென்கிறார்கள். காலிலியோ வெனிஸ் நகரத்தில் இருக்குங் காலையில் தூரத்துப் பொருளைச் சமீபத்தில் காணும்படியான கருவியொன்று ஏற்பட்டிருக்கிற தென்கிற இச்செய்தியைக் கேள்விப்பட்டு, உடனே அந்த விஷயத்திலேயே மனதைச் செலுத்தி, பின்பு தாமே அப்படிப்பட்ட தூரதிருஷ்டிக் கண்ணாடியொன்று சிறிதாகச் செய்து முடித்தார். இப்படி அவர் கண்டு பிடித்த விசித்திரமான கருவியின் பெருமை யைக்கேட்டு அப்பட்டணத்துப் பெரிய மனிதர்களெல்லாம் அதன் பெருமை யைக் காணும்படி எப்போதும் அவர் வீட்டு வாயிலில் வந்து நிறைந்திருந்தார் கள். வரவர தூரத்துப்பொருள் வெகு நன்றாகத் தெரியும்படி அந்தக் கருவியை அவர் மிகவும் சீர்ப்படுத்தி, அப்படிப்பட்ட கருவியொன்றை வெனிஸ் நகரத்து ஸர்வ கலாசாலைத் தலைவர்களுக்குப் பரிசாகக்கொடுக்க அதை அவர்கள் மிகவும் கொண்டாடி ஏற்றுக்கொண்டு, **கணித சாஸ்திர பண்டிதர்** என்னும் பட் டத்தை அவருக்கு ஆயுளளவும் ஸ்தாபித்து, 650-ரூபாயா யிருந்த அவர் சம் பளத்தையும் 1,225—ரூபாயாக உயர்த்தினர்கள்.

***

தூரதிருஷ்டிக் கண்ணாடியின் மாதிரியை முதல் முதல் ஏற்படுத்தி யது ஒரு உலாந்தக்கார னென்றாலும், பின்பு அதை நக்ஷத்திர மண்டலத்தைச் சோதிப்பதற்குத் தகுந்த கருவியாகக் கண்டதும், சோதிட சாஸ்திரத்தைப் பற்றிய பல நூதன விஷயங்களைக் கண்டு பிடிப்பதற்கேற்ற கருவியாக ஏற் படுத்தினதுமாகிய இவற்றாலுண்டான பெருமை யெல்லாம் காலிலியோ வினுடையவைதான். அந்தக் கருவியின் துணையைக்கொண்டு காலிலியோவி னால் சந்திர மண்டலத்திலுள்ள மேடு பள்ளங்களும், சூரிய மண்டலத்திலுள்ள புள்ளிகளும், சுக்கிரனுடைய கலைகளும் நன்றாய்க் கண்டறியப்பட்டன. மேலும், அந்தக் கருவியைக் கொண்டு செம்மையாய் ஆராய்ச்சி செய்ததில் கிரகங்களெல்லாம் பூரணமானவை யென்றும், மாறுதலற்றவை யென்றும் அரிஸ்தோதல் என்பவர் சொல்லிய சித்தாந்தம் சரியல்ல வென்றும். இந்த நவக்கிரக மண்டலந்திற்குச் சூரியனே மையமெனவும், பூமியும் மற்றக்

---

அதோ விளையாடிக்கொண்டிருக்கிற குழந்தைதான் அவ்வீட்டின் வருங் கால சக்ரவர்த்தி! ஒரு அரசனின் வேண்டுதலைவிட ஒரு குழந்தையின் வேண் டுதல் உடனே நிறைவேற்றி வைக்கப்படும்,

கிரகங்களைப் போலவே அதைச் சுற்றியோடுகிற தெனவும் 'கோபர்னிகஸ்' ஏற்படுத்திய சித்தாந்தமே சரியானதென்றும் காலிலியோவுக்குத் தெளிவாய்த் தெரியவந்தது. தெரியவரவே, விரோதிகளிடத்தில் தமக்கிருந்த பகையினலும் கோபத்தினலும், இன்னும் அவ்விஷயங்களை உறுதியாய்த் தாங்கி நன்ருய் நிரூபித்துக் காட்டினர். இது காரணமாகவே, அவர்க்குச் சீக்கிரத்தில் குருபீடத்தோடு விரோதமுண்டாகி பைபில் வேதநூலில் உள்ளதற்கு விரோதமாய் அவர் கூறுவதாய்ச் சொல்லி அவ்வரைக் குற்றவிசாரணை செய்யும்படி நேரிட்டது. இக்காலத்தில் காலிலியோ கண்டுபிடித்த பல விஷயங்களிலும் மிகவும் சிறந்தது பிரஹஸ்பதி நக்ஷத்திரத்திற்குச் சில உபக்கிரஹங்கள் உண்டென்று கண்டறிந்ததாகும். 1610-ம் வருஷத்தில் தம்முடைய தூரதிருஷ்டிக் கண்ணுடியைக் கருவியாகக்கொண்டு முதல் முதல் அவற்றுள் மூன்று நக்ஷத்திரங்களைக் கண்டறிந்தார். பின்னும் விடாமல் அப்படியே அநேகம் ஆராய்ச்சிகளைச் செய்து உலகத்திற்குப் பல நன்மைகளை விளைவித்தார்.

***

பின்பு காலிலியோ தஸ்கனி நாட்டரசனுடைய வேண்டுகோளுக்கிசைந்து பிளாரென்ஸ் நகருக்குச் சென்றதில் அங்கு அவருக்கு சுவாதீனக் குறைவு நேரிட்டது. அரசனுடைய அணைவு இருந்ததென்ருலும், காலிலியோ வெளியிட்ட சித்தாந்தங்கள் அத்தேசத்தார் அனைவரும் கையாண்டுவந்த கிறிஸ்து வேதத்திற்கு மிகவும் விரோதமா யிருந்ததுபற்றி, யாவருக்கும் மனவருத்த முண்டாயிற்று. அப்படி அனைவரும் ஒரே முகமாய்த் தன்னை எதிர்ப்பதைக் கண்டு காலிலியோ, வேத புஸ்தகம் ஆத்துமா கடைத்தேறுவதற்கு வேண்டிய விஷயங்களையே சொல்லவந்தவை யென்றும், அப்படிப்பட்ட விஷயங்களெல்லாம் நாம் யுக்தி புத்திகளால் விசாரித்தறியத் தக்கவையல்லவென்றும், நம்முடைய யுக்தி, புத்தி, விவேகம், நியாயம்—முதலியவைகளைக் கொண்டே ஆராய்ந்தறியத்தக்க விஷயங்களைப்பற்றி அவை யொன்றும் சொல்ல வந்தவையல்ல வென்றும், இப்படி ஒரு கடிதம் எழுதி அரசனுக்கே அனுப்பி அந்த விரோதத்தை அடக்க முயன்ருர். அதுவும் பயன்படாமற் போயிற்று. காலிலியோ வேதத்தை மனஸ்பூர்வமாய் ஒப்புக்கொள்கிருர். ஆனல், பூமி, வானம் சம்பந்தமான ஆராய்ச்சிகளை நம் புத்திகொண்டு நூதனமான விஷயங்களைக் கண்டறிந்தால் அவை குற்றமாகா தென்கிருர். இது உண்மையே. ஆயினும், இந்த அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்ளாத பிடிவாதக்காரர்களின் மத்தியிலே கலாநிபுணரான காலிலியோவைக் கடவுள் வைத்துவிட்டார். விளக்கின் பக்கத்திலே இருள்! காலிலியோ இந்த விஷயத்தைப் பற்றி அரசனுக்கு எழுதிய வாக்கியத்தின் கருத்தை அடியில் எடுத்துக் காட்டுகிறோம்.

***

"வேதத்தின் முக்கியமான கருத்தெல்லாம் மன்னுயிர்கள் மோக்ஷம் பெறுவதற்கு அவசியமான விஷயங்களைத் தெரிவிக்க வேண்டு மென்பதே யென்று நன்ருய்த் தெரியவருகின்றது. அந்த விஷயங்களெல்லாம் பிராணிகளுடைய புத்திக் கெட்டாதவை யாதலால், அவை பெரியோருடைய முகத்தினின்றும் உண்டானவை யென்பதான ஒன்று மாத்திரத்தினலேயே

தவிர, மற்ற எந்த விதத்திலும் நாம் அவற்றைக் கௌரவப் படுத்த நியாயமில்லை.

எல்லா விஷயங்களையும் நாமே அறிந்து கொள்ளும்படி நமக்குப் புலன்களையும் பேசுந் திறமையையும் விவேகத்தையும் தந்தருளின கடவுளே அவற்றின் உபயோகத்தை நாம் அபேக்ஷை செய்யவேண்டுமென்றுவது, அவைகளே நமக்கு யாவற்றையும் அறிவிக்கப் போதுமானவையா யிருக்க, அவற்றைக் கொண்டு நாம் யாதொரு அறிவையும் தேடக்கூடாதென்றுவது கருதினுரென்றுல் அதை நாம் எப்படி நம்புகிறது? மற்ற விஷயங்கள் இருக்கட்டும்; சோதிட சாஸ்திரத்தைப் பற்றி இரண்டோரிடத்தில் சூரியன், சந்திரன், சுக்கிரன் இவைகளுடைய பெயர் தவிர, மற்றெதுவும் வேதத்தில் சொல்லப்படவில்லையென்றுல், அப்படிப்பட்ட சாஸ்திரவிஷயங்களில் அந்த வேதம் எப்படிப் பிரமாணமென்று நம்பலாம்?

ஆதலால், நாம் இந்தப் பிரபஞ்சத்தைப்பற்றி ஆராயவேண்டுமென்றுல், அதற்கு வேதத்திற் சொல்லிய விஷயங்களை நாம் சிறிதும் ஏற்றுக்கொள்ளக் கூடாது.

நமது யுக்தி புத்திகளையும் தகுந்த நிரூபணங்களையும் நியாயங்களையும் கொண்டு நன்றுய் ஆராய்ந்து உண்மைகளை அறிந்து கொள்ளவேண்டுமென்றே புலப்படுகின்றது.

ஆகவே, இந்தப் பிரபஞ்ச விஷயத்தில்- நமது புத்தி விவேகங்களுக்கும் நியாயத்திற்கும் பொருந்தும்படி எது உண்மையென்று தெளிவாய்த் தெரியவருகிறதோ அந்த விஷயத்தில் நாம் சிறிதும் சந்தேகம் கொள்ளக் கூடாது.''

***

பிடிவாதக்காரர்களுக்கு எழுதி நோவதில் ஆவது என்ன? கடைசியில் காலிலியோவைப்பற்றி 1615-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 25-ம் தேதி விசாரணை நடந்தது. நவக்கிரக மண்டலத்திற்குச் சூரியனே மையமென்பதும், பூமியும் மற்ற கிரகங்களைப்போலவே அதைச் சுற்றி யோடுகிறதென்பதுமான இப்படிப்பட்ட சித்தாந்தங்கள் வேதத்திற்கு விரோதமானவை யென்றும், இனி இப்படிப்பட்ட கருத்தை அவர் கொண்டிருக்கக் கூடாதென்றும் பிரசித்தப்படுத்தப்பட்டது.

***

1617-ம் வருஷத்தில் அவர் இனி நாம் இந்த எதிரிகளோடு போராடாது சும்மா இருக்கிறதென்று தீர்மானித்து, பதினுறு வருஷகாலம் இந்த ககோளத்தினுடைய நிலைக்கு வேண்டிய பலவிதமான உதாரணங்களைச் சேர்த்தெழுதுவதே வேலையா யிருந்தார். அப்படிப்பட்ட புஸ்தகமொன்றை

நன்ருய் எழுதி முடித்ததும் அதைப் பிரசுரஞ் செய்யும்படி உத்தரவு பெற்றுக் கொண்டு பிரசுரப்படுத்தினர். அந்தக் கிரந்தங்கள், 'சுக்ரீதோ' என்பவர் சாதாரணமான கேள்வி சந்தேகம் முதலியவற்றை உண்டாக்கித் தூண்டவும், 'சால்வியதி' என்பவர் சாஸ்திர ஸம்பந்தமான விடைகள் கொடுத்து வரவும், மற்ருெருவர் மத ஸம்பந்தமான ஆக்ஷேபம் முதலியவற்றைச் செய்யவும் இப்படியாக ஒரு ஸம்பாஷணை ரூபமாய் எழுதப்பட்டன.

***

இந்தப் புஸ்தகத்தைப் பிரசித்தப்படுத்தவே, அவ்விடத்தார்க்கு அவரிடத்திலிருந்த ஆக்கிரகம் இன்னும் அதிகமாயிற்று. அவர் அந்தக் கிரந்தத்தில் 'சிம்பிலிசியஸ்' என்னும் ஒரு மூன்ருவது மனிதனை ஏற்படுத்தி அவர் ஆக்ஷேபனை செய்வதாகப் பாவித்துத் தம் மதத்தை நன்ருய்ப் பரிகாசஞ்செய்திருக்கிருரென்றெண்ணிப் போப் என்னும் மதாசாரியர்கூட அவரிடத்தில் கோபங் கொண்டார். அதனுல் 1633-ம் வருஷத்தில் காலிலியோவை ரோமாபுரிக்கு வரவழைத்தார்கள். அப்போது அவர் தள்ளாதவரென்றும், வயதானவரென்றும், தேகம் அநுகூல மில்லாதவரென்றும் இப்படி என்ன காரணம் சொல்லியும் ஒன்றும் பயன்படாமல் கடைசியில் அவர் மிகவும் தள்ளாமையோடு அவ்விடத்திற்குப் போகும்படியாயிற்று.

***

அவ்விடத்து விசாரணையில் நடந்த சங்கதிகளை எடுத்துரைக்க இங்கிடமில்லை. விசாரணை செய்த தீர்ப்பு 1633-௵ ஜூன்மீ 22-ம்தேதி பிரவித்தப் படுத்தப்பட்டது. அந்தத் தீர்ப்பில் 1615-ம் வருஷத்தில் ஒரு விசாரணை நடந்ததும், அந்த விசாரணையில் இலேசான சிக்ஷையொன்று அவருக்கு விதிக்கும்படித் தீர்மானமானதும், அந்தத் தீர்ப்பையும் மீறி அவர் தான் பிடித்ததையே பிடிவாதமாகக் கொண்டு தன்னுடைய சித்தாந்தத்தைப்பற்றிக் கிரந்தம் ஒன்று எழுதிப் பிரசுரஞ்செய்து அனைவருக்கும் மனவருத்த முண்டாக்கியதுமாகிய இவற்றை யெல்லாம் செப்பி, இப்படி யெல்லாம் இருந்தும், இப்போது இவர், இதுவரையில் தான் மதவிரோதமாய்ச் செய்த செய்கைகளெல்லாம் பிசகானவைதாமென்று தன்னைத்தானே நிந்தித்து மனப்பூர்வமாய்ப் பிரமாணம் பண்ணிச் சொல்லுகிறபடியால், இவர் செய்த பிழைகளெல்லாம் மன்னிக்கப்பட்டன ; ஆயினும், இனிமேல் இவர் இவ்விதமான செய்கைகள் செய்யத் துணியாமல் இருப்பதற்காகவும், மற்றவர்க்கும் இவ்விஷயத்தில் கொஞ்சம் அச்சம் உண்டாயிருப்பதற்காகவும், இவர்க்குச் சிறிதளவாவது சிக்ஷை விதிக்கவேண்டுமென்றும், அவர் எழுதிய புதுப்புஸ்தகத்தை இனிமேல் பிரசுரம் செய்யக்கூடாதென்றும், அவர் லகுவாயே ஒரு சிறையிலிருக்க வேண்டுமென்றும் இப்படியாகப் பிரசித்தப் படுத்தப்பட்டது. அந்தோ! படித்த படிப்புக்கும், உற்றுணர்ந்து புதிதாய்க்கண்டு பிடித்து உழைத்த உழைப்புக்கும் பரிசா இது? ஒரு கல்விமான் அபிப்பிராய பேதக்காரர்களின் மத்தியில் சிக்கிக்கொண்டு படும்பாட்டை அந்தோ! என்னென்பது?

***

1633-ம் வருஷம் ஜூன் மாதம் 22-ம் தேதி காலிலியோ துக்கத்தைக் குறிக்கும் உடையொன்றை உடுத்தி மினர்வா என்னும் ஞான தேவதையின்

கோயிலுக்கு அழைத்துக்கொண்டு போகப்பட்டார். அங்கே அந்தச் சுவாமியின் முன்னிலையில் மேற்சொன்ன தீர்ப்பைப் படிக்க, காலிலியோ முழங்காலிட்டு வணக்கத்துடன் அதைக் கேட்டுக் கொண்டிருந்து அதைப் படித்தானதும் தான் அதுவரையில் கொண்டிருந்த, பூமி தனக்குத்தானே தினந்தோறும் ஒருதரம் சுற்றிக்கொண்டு சூரியனைச் சுற்றி ஓடுகிற தென்பதும், சூரியன் நிலையான தென்பதுமான இவ்வித கொள்கையை விட்டுவிடுவதாக அதிதுக்கத்தோடும் பொறுமையாய்ச் சொல்லி அதில் கையெழுத்து செய்தார். தாம் புதியதாய்க் கண்டறிந்து ஸ்தாபித்தவற்றைத் தாமே பிழையென்று ஒப்புக்கொள்வதற்கு அவரது உத்தமமான மனம் எவ்வளவு பாடுபட்டதோ!

***

உடனே அவரைச் சிறைச்சாலைக்குக் கொண்டு போனார்கள். ஆயினும், தீர்ப்பு நிறைவேற்றினபடியே அவர்க்கு சிக்ஷை நடத்தப்படவில்லை. அந்தச் சிறையில் நாலே நாலு நாள் வசித்ததும், அவர் தனக்கு மிகவும் நேசமான ஒரு ராஜ குருவின் மாளிகையில் வசித்துக் கொண்டிருக்கும்படியாக விடப்பட்டார். டிசம்பர் மாதம் முதலில் போப் என்பவர் பிளாரென்ஸ் நகரத்துக்குச் சமீபமான இடங்களில் யதேச்சையாய்ச் சஞ்சரிக்கலா மென்று அவருக்கு அனுமதி கொடுத்தாரென்றாலும் அப்போதும் அவர்களுடைய காவல் மட்டும் ஒழியவில்லை. இப்படி அவர்கள் மானபங்கமாக நடத்தினது காலிலியோவுக்கு மனம் மிகவும் புண்படும்படியாயிற்று. இவ்வளவெல்லாம் இருந்தும், அவர் தன்னுடைய சாஸ்திரப் பயிற்சியைப்பற்றிய முயற்சிகளை மட்டும் கைவிடவில்லை. அதுவரையில் தான் கண்ட விஷயங்களை மேன்மேலும் விருத்தி செய்வதும் புது விஷயங்களைக் கண்டு பிடிப்பதுமா யிருந்தார். கடைசியில், தனக்குத் தெய்வகதியால் கண்கெட்டு எழுத்தைப் பார்க்கக் கூடாமற் போமளவும், பிருஹஸ்பதியின் உபக்கிரஹங்களைப்பற்றிக் கணக்குகளை ஓயாமல் கணித்துப் பார்த்துக்கொண்டே யிருந்தார்.

***

இப்படியாகத் தன் வாழ்நாள் முழுவதும் இந்த ஈசுவர சிருஷ்டியில் உண்டான அதிசயங்களைக் கண்டு ஆநந்தித்தே காலங்கழித்து தனக்கு எழுபத்தெட்டாம் வயதான 1642-ம் வருஷம் ஜனவரி மாதம் 9-ம்தேதி பரலோகஞ் சென்றார். இவர் இவ்வளவு தூரம் வருந்தி ஸ்தாபித்த சித்தாந்தம் அவரது விரோதிகளால் மறுக்கப்பட்டதாயினும் அது சீரழிந்து போயிற்றோ? அவ்விதம் அழிவதற்குக் கடவுள் சம்மதிப்பாரா? உடனே அவ்வருஷத்திலேயே சிறந்த சாஸ்திர பண்டிதரான 'நியூடன்' என்பவரைக் காலிலியோவுக்குப் பிந்திய பண்டிதராக இவ்வுலகத்தில் அவதரிக்கச் செய்தார். காலிலியோ ஸ்தாபித்த சித்தாந்தங்களே இப்பொழுது இவ்வுலக மெங்கும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளன. எக்காலத்திலும் உண்மைக்குப் பழுதில்லையன்றோ? காலிலியோ என்ற ஒரு யானையை எதிர்க்கலாம்; அவர்க்குப் பின் தோன்றியவர்களான யானைக் கூட்டத்தை எதிர்க்க முடியுமோ? படித்தவர்கள் படும்பாடு இவ்வுலகில் கொஞ்சமா? அவமதிப்புகள் சொல்லி முடியுமா? ஈசன் தான் அன்னோருக்குத் துணை! "இறந்தபின் கீர்த்தி" என்பதும் அவர்களுக்கே.

---

சென்றவர் செல்க. நின்றவர் வாழ்க.

# சிறுமணித்திரள்

(264-ம் பக்கத் தொடர்ச்சி.)

601. தனது குடும்ப ரகசியத்தைக் காக்கும் சக்தி தனக்கு எப்போதும் இருக்கப் பார்க்கவேண்டும். எவ்வளவு நெருங்கியவனிடத்தும் அதை வெளியிடாத உறுதியுடன் இருப்பதே தன் மானத்தைப் பேணும் வழி.

602. தனது சிலாக்கியமான நம்பிக்கைக்கு எதிரிடையாக மோசமாயும் மறைத்தும் நடந்துகொண்டு விட்ட நண்பனைக் காணச்செல்வது மனதுக்கு மிக்க நாணத்தைத் தரும்.

603. இருவரும் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு பிரிகிற நேரத்தின் தன்மையை யாரால் சொல்ல முடியும்? மறுபடியும் அவர்கள் சந்திக்கிறார்களோ இல்லையோ?—அல்லது சந்திக்க நெடுங்காலமாகிறதோ என்னவோ? அல்லது அதுவே கடைசி சந்திப்பாக இருக்கலாமோ யாதோ? அது கடவுள் அறிந்து வைத்த ரகசியம். மனிதனுக்கோ தன்னைக் காண வருபவரைப் பார்ப்பதற்கு முன் தனக்கு மரணம் என்பது கூடத் தெரிவதில்லை. ஐயோ பாவம்!

604. இவ்வுலகில் உண்மையான சுகம் இல்லை யென்பது பிரத்தியக்ஷ விஷயம். தாகமுள்ள பிரயாணி ஜலமில்லாத ஆற்றை நோக்கிச் செல்வதுபோலவே நாமும் அலைந்து திரிகிறோம். போதாக் குறைக்கு "இயற்கை" யம்மையின் உதைகளும் குத்துகளும் கூட நெருங்கிச் சேருகின்றன.

605. ஒரு சாமானை வாங்கச் சென்ற கடையில் கடைக்காரன் அனுவசியமாகச் சண்டையிட்டால், அந்த சாமானை வீட்டிற்குக் கொண்டுவந்த போதுங்கூட வீட்டிலும் எவ்விதமோ ஒரு சண்டை யுண்டாகிவிடுமாம்.

606. ஒரு விஷயத்திற்கு முடியாதெனப் பதில் எழுதி யனுப்பிய பிறகு மறுபடியும் அதே விஷயத்தை வற்புறுத்திக் கேட்பவர்களுக்கு முந்திய பதிலையே அவர்கள் கவனித்துக்கொள்ளும்படிவிட்டுப் பதில் தராது மௌனமாக இருந்துவிட வேண்டுமாம்.

607. வியாபாரியா யிருப்பவனுக்கு எவ்வளவு பணம் வந்தாலும் போதாது. வந்த பணத்திற்குப் புது சரக்குகளை வாங்கிவிட்டு, தன் கடன்காரர்களுக்குப் பிறகு கொடுப்பதாகச் சொல்லிக் கண்ணைத் துடைத்து அனுப்புவது பலாது வழக்கம். பணம் நிறையப் பெட்டியிலிருப்பது உத்தியோகஸ்தனிடத்தில் தான். அவனுக்கு வீடு, நிலம், நகையன்றி வேறொன்றில் செலவிட ஏதுவில்லை.

608. ப்ரிட்டிஷார் முதலில் வியாபாரத்தைக் கைப்பற்றிக்கொண்டு,

---

தான் ஓரிடத்தில் வந்து தங்கியிருக்கையில் தனக்கு வேண்டியவர்கள் எங்காவது ஊருக்குப் புறப்பட்டுவிட்டால் அப்போது தானும் புறப்பட்டு விடுவதே மேல். அவர்கள் திரும்பிவரும்வரை அவர் வீட்டில் இருப்பதாயின் அது வலது கை இழந்த அநாதியான கேவல நிலையே. கேவலப்படவும் வரும்.

அதை நிலை நிறுத்தத் தங்களுடைய ஆட்சியை உபயோகப்படுத்தி வந்திருக்கிறார்கள்.

—ஸ்ரீ. ஏ. ரங்கஸ்வாமி ஐயங்கார்.

609. பிரிட்டிஷ் பார்லிமெண்ட்டில் ஒரு கட்சிக் கவர்ன்மெண்ட் போய், மற்றொரு கட்சிக் கவர்ன்மெண்டு வருமானால், அவர்கள் அன்னிய தேச சம்பந்தங்களில் பழய போக்கை மாற்றிவிடக்கூடா தென்பது ஒரு தொடர்ந்த ஸம்பிரதாயம்.

610. "ஒருவன் எவ்வளவு பலசாலியா யிருந்தாலுங்கூட ஆபீஸ் தொந்திரவும் சம்சாரத் தொல்லையும் அவனுடைய பலத்தைச் சீக்கிரத்தில் போக்கி விடுகின்றன." அந்தத் 'தொந்திர'வும் 'தொல்லை'யும் தொலைய வழி யாதென்றே உலகம் அலைகிறது.பாசம் உள்ளவரைவேதனையே.

611. "ரஹமான் ரஹீம்" என்ற பிரார்த்தனையுடன் முஸ்லிம்கள் தங்கள் தின வாழ்க்கையைத் துவக்க வேண்டுமென்று "குரான்" போதிக்கின்றது. ரஹ்மான் என்றால் சர்வ நன்மை பயக்கும் தீனதயாளு என்று பொருள். ரஹீம் என்றால் கருணைக்கடவுள் என்பதாகும்.

612. உபவாசம் செய்தால் ஆத்ம சக்தி ஏற்பட்டு மனம் ஒரு நிலையில் நின்று மதப்பற்று அதிகரிக்கும்.

613. ஜீவனுக்கேற்பட்டுள்ள முக்தியை யடைய உலகப்பிறவி ஒரு மார்க்கமாகும். ஜீவ யாத்திரையில் உலகம் ஒரு தங்குமிடம். இவ்வழியாக மாறி மாறி ஜனித்து மாயையைக் கடந்து அப்பால் உள்ள சாசுவத பதத்தை யடையவே ஒவ்வொரு மதத்தினரும் தங்களுக்குப் போதிக்கப்பட்ட வழியில் செல்லுகிறார்கள்.

614. எப்பெரியோரையும் நம் காலவாழ்க்கையின் ரீதியைக்கொண்டு நிதானிக்காமல், அவர் காலவாழ்க்கையின் ரீதியைக்கொண்டு நிதானித்தால் அவரவர் பெருமை நன்கு விளங்கும்.

615. உண்மைக் கல்வி கலாசாலையை விட்டபின்னர்தான் ஆரம்பிக்கிறது. வாழ்வில் ஒருகாலத்திலே தான் கல்வி பயிலுவதென்பதும், அத்துடன் அது முடிவடைகிறதென்பதும் கிடையாது. வாழ்நாள் முழுதும் கல்விப்பயிற்சி செய்து அறிவைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்பதே நமது அவாவாக இருக்கவேண்டும்.

—ஸர் பிரேடிரிக் ஸைக்ஸ்.

616. யாரும் வாழ்க்கையில் ஒரு உன்னத லக்ஷ்யத்தை ஏற்படுத்திக் கொண்டு, அதற்காகக் கடமையை முக்கியமெனக் கருதி உண்மையுடனும் ஒழுக்கத்துடனும் உழைக்க முயலவேண்டும். உழைப்பினாலும் தன்னலமின்மையினாலும் பிறர் நம்பிக்கைக்கு எப்பொழுதும் பாத்திரமாக வேண்டியது அவசியம்.

617. பணம் படைப்பதும் பதவி பெறுவதுமே வாழ்க்கையில் மேன்மையாகிவிடாது. ஒருவன் கருமமே கண்ணாயிருந்து உண்மையுடனும் ஒழுக்கத்துடனும் உழைத்துவந்தால் உலகம் தானாகவே அவனைப்போற்ற முற்படும்.

—ஸர் பிரேடிரிக் ஸைக்ஸ்.
(பம்பாய் கவர்னர்.)

---

தன் வீட்டுக்கு வந்தவன் திடீரென்று மிக்க வியாதியில் விழுந்துவிட்டால்,—"அப்படியா"—என்று மட்டும் கேட்டுவிட்டு அவனைப் பயணப்படுத்தி அனுப்பிவிடுகிறார்கள். அவனும் தன்னைக் கவனிக்காததைக்கண்டு புறப்பட்டுவிடுகிறான். அவர்களும் ஜாடையாக இருந்து விடுகிறார்கள்!




## 2. அற்ப குணம்.

(284-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 144. புழுக்கை யொழுக்க மறியுமா?

புழுக்கை என்ற பதம் வேலைசெய்யும் கீழ்சாதியைக் குறிக்கும். இழிவான தன்மையில் இருப்பவரையும் குறிக்கும். கேவலமான ஒரு குப்பையில் பிறந்தவர்களையும் குறிக்கும். அந்தந்த ஜாதிக்கும்—தன்மைக்கும்—'குப்பை'க்கும் தகுந்த குணவொழுக்கந்தான் அதது அறியக்கூடுமே தவிர, அதற்கும் உயர்ந்ததான மேலொழுக்கத்தையோ பெரிய புத்தியையோ அது ஒருநாளும் காணப்போவதில்லை. அற்பத்தில் தோன்றியவர்களும், அற்பத்திலேயே படிந்தவர்களும், அற்பத்தன்மையிலேயே ஆழ்ந்திக் கிடப்பர். அவர்களின் அற்ப குணங்களும் எவ்வாறேனும் வெளிவந்துவிடும். எது உயர்ந்த தென்று நினைத்து இந்த அற்பமனப் போக்குள்ளவர்கள் செய்கிறார்களோ, அது முடிவில் அற்பத்தன்மையான குணத்தைக்காட்டிக் கொண்டதாகவேதான் ஆகிவிடும்.

### 145. பள்ளி பாக்குத் தின்றால் பத்துவிரலும் சுண்ணாம்பு.

ஏன் இப்படி? அற்பத்திற்கு சுசிகரமாயிருக்க எப்படித்தெரியும்? ஒன்றை உபயோகிக்கவேண்டிய ஒழுங்கின்படி உபயோகிக்கும் விதத்தை அந்த அற்பம் எங்கே அறியப்போகிறது? அற்பகுணமுடையார் எப்போதும் அற்ப சந்தோஷத்திலே பெரிதும் திருப்திபட்டுப் போவார். ஒரு காரியத்தை ஒழுங்காகச் செய்கிறதன்மை அற்ப ஜென்மத்துக்குத் தெரியவராது. சுண்ணாம்பை ஒருவிரலால் எடுத்து வெற்றிலையில் தடவத்தெரியாமல் பத்துவிரலையும் சுண்ணாம்பாக்கிக் கொள்வதுடன் அதைத் தங்கள் உடையிலோ சுத்தமாயுள்ள கதவு முதலியவற்றிலோ துடைத்தும் விடுவார்கள். தங்களைச் சுத்தமாய் வைத்துக் கொள்ளுகிற ஒரு பக்குவ புத்தியும் கிடையாது. இந்த அற்பர்கள் இருக்கும் வீடு குப்பையும் சேறும் அலங்கோலமுமா யிருக்குமேயன்றி சுத்தமும் நாசூக்குமாயிராது. குளித்து எத்தனை நாட்களானதோ, தங்கள் உடைகளைத் துவைத்து எத்தனை நாட்களானதோ? அழுக்குபடிந்த ஆடைகளை எடுத்துமேற் போட்டுக் கொள்ளுகிறோமே யென்ற எண்ணமும் அவர்களுக்கு உண்டாகாது. இவையெல்லாம் அந்த அற்பத்தின் பழக்கத் தன்மையாகவும் சொல்லலாம்.

---

இன்று போகலாமா—நாளை போகலாமா என்று யோசிப்பதைவிடச் சோம்பலை உதறிவிட்டு இன்றே போய்ச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்துவிட்டுத் திரும்புவது நாளைக்கு சுகமாய் உட்காரச் சௌகரியப்படும்,

பத்துவிரலையும் சுண்ணும்பாக்கிக் கொள்வதும் ஒரு தெரியாத் தன்மைதான். அவரவர்கள் செய்துகொள்ளும் ஆடம்பரத்திலேயே அவரவர்களின் அற்பகுண மோ நற்குணமோ வெளிப்பட்டுப் போகுமென்பது இப்பழமொழியின் பிர தான கருத்து. பத்துவிரலையும் சுண்ணும்பாக்கிக் கொண்டு, அதனுல் தான் தாம்பூலம் போட்டுக்கொண்டதாக ஒருவன் தன்னைப் புலப்படுத்திக் கொள் வானுகில், அது அவனது அற்பத்தனத்தையும் அறியாமையையுமே வெளியிட் டுக் கொண்டதாய் முடியும். ஒருவன் தனக்கு ஐந்து ரூபாய் கொடுக்கவேண் டியிருந்து அதைத் திருப்பித்தர அவனுக்கு சமயம் கிடைக்காமல் பல செலவுக ளும் மேலிட்டு நாட்கள் மாதங்கள் சென்றுகொண்டே போவதாயிருந்தால், அவனை நேரிலேயே சந்திக்கும்போது அவன் தரவேண்டியதை நினைப்பூட்டிக் கேட்டுப் பெறுவது உயர்ந்த குணமாகும். அவ்விதமின்றி அதிக அவசரமாகக் கடன் கேட்பதுபோல் கேட்டு, ஊர்போனதும் அந்த நிமிஷமே திருப்பியனுப் புவதாகக்கூறிப் பெற்றுக்கொண்டுபோய், தனக்கு வரவேண்டிய தொகை வந்துவிட்டதென்ற திருப்தியுடனும் ஏமாற்றப் பார்ப்பது யோக்கியதையுள்ள தன்மையாகுமா? இது அற்பபுத்தியுடன் சேர்ந்த ஒரு இழிவான குணம்தான். இவ்வித அற்பமான பதர் என்னதான் தன்னை ஆடம்பரமாக உடுத்திக் காண் பிப்பினும் அவன் செய்கைகள் என்றைக்கும் அற்பமாகவேதான் இருக்குமே யன்றிப் புகழத் தகுந்ததா யிராது. இந்த அற்பம் எவ்வாறேனும் ஒதுங்கினுல் —தூரத் தொலைந்தால் அதுவே போதுமானதென்றுதான் நினைப்பார்கள்.

### 146. பள்ளி கொழுத்தால் பாயிலிராள், நண்டு கொழுத்தால் வளையிலிராது.

இந்தப் பழமொழி அற்பர்களின் தன்மையைக் குறிப்பிப்பதற்காக உப யோகப்படுத்தியதாகும். நண்டு கொழுத்தால் வளையிலிராமல் துள்ளி வெளி யில்வந்து சிக்கிக்கொண்டு எவ்விதம் உயிர்விடுமோ, அவ்விதமே அற்பர்களும் தாங்கள் புதிதாய்ப் பெரிய மனிதர்களானுல் அந்தப் "பவிசி"யை வெளியில் ஆடம்பரமாகக் காண்பித்துக்கொள்ள முயன்று நண்டைப்போல் சாகாவிடி னும் அவமானமாவது படுவார்கள். எதிலும் தங்களையே பெரிய மனிதர்களாக எண்ணிக்கொண்டு நுழைந்து கொள்வார்கள். அங்கு அற்பர்கள் செய்கிற தென்ன? தங்களின் துடுக்குத்தனத்தையும் வாய்மதத்தையும் காண்பித்துக் கொள்வதே. அதன் முடிவாக ஏதாயினும் ஒரு சண்டைசச்சரவு நேர்ந்து கொண்டு அவமானமடைவதே இவர்களின் பங்காக இருக்கும். அற்பம் என் றைக்கும் தனது ஜன்மபுத்தியை விட்டுப் பெரியபுத்தி படைக்கப் போவதில்லை.

### 147. முக்காதம் சுமந்தாலும் முசல் கைத்தூக்கு.

இங்கு முசலை ஒரு அற்பத்துக்கு சமமாகப் பேசியபடி. அதன் பாரமும் அற்பமே. அதைத் தூக்கிச்செல்ல ஒரு கூடை வேண்டியதில்லை. இவ்விதமே அற்பர்களின் சொல்லை ஒருவார்த்தையாக மதிப்பதும் கிடையாது. ஒரு அற்ப

இன்னுர் இறந்தாரென்று தெரிவிக்கும் கடிதங்களுக்கு—'அதற்காகத் துக்கிக்கிறேன்'' என்று பதில் கடிதங்கள் வருகின்றன. இந்த உபசாரக் கடிதங்கள் ஆயிரம் பெறுவதைவிட, உருக்கமுள்ள நெஞ்சமுடையோரிட மிருந்து மிக ஆறுதலும் புத்திமதியுமான ஒரு அன்புக் கடிதம் பெறுவதுமேல்,

புழு ஊரிலிருந்து வந்திருக்கிறதென்றால் அதை ஒரு கனமாகக்கருதிப் போய்ப் பார்ப்பதும் இல்லை. அந்த அற்பமே தன் வீடு தேடிவரினும் அதனிடம் அதிக வார்த்தை வைத்துக் கொள்வதுமில்லை. அதை ஒரு பொருளாக மதிப்பது மில்லை. ஒரு அலக்ஷியத்தோடு அந்த அற்பத்தைப் பார்த்து ஒதுங்கவே நேரும்.

**148. அச்சிக்குப் போனாலும் அகப்பை அரைக்காசு.**

**149. ஐங்காதம் போனாலும் அகப்பை அரைக்காசு.**

இவ்விரு பழமொழிகளின் கருத்தும் ஒன்றே. அச்சி (Achien) என்பது செல்வம் நிறைந்த ஒரு பிரபலமான துறைமுகம். அவ்வளவு தூரம் சென்ற போதிலும்கூட அகப்பைக்கு அதிக விலையில்லை. அது அங்கும் அரைக் காசுதான். இவ்விதமே ஐங்காதம் போனாலும் அகப்பைக்கு அதே விலைதான். அற்பர்களை மதிக்கிற மதிப்பை இப்பழமொழி விளக்குகிறது. அற்பம் எவ்வளவு தூரம் போனால்தான் என்ன? எத்தனை மேல்மாடியில் வாழ்ந்தால் தான் என்ன? வயதுஏறிப் பெரியதலையாக உயர்ந்தால் தான் என்ன? தன்னிடம் இருக்கிற அற்பகுணம் தொலைகிற வரையில், அந்த அற்பகுணம் இருக்கிறவரையில் அதற்கு "சின்னப்புத்தி" இருந்துகொண்டு தான் இருக்கும். அது ஒருநாளும் தன்னை மேன்மையாய் உயர்த்திக்கொண்டுவிட முடியாது. ஒரு அற்பன் ஒரு பெரிய இடத்திற்குச்சென்று அங்கு அறிமுக முள்ளவனாகிறான். அந்த இடத்திற்குத் தகுந்தபடி நடந்துகொள்ளுகிற தன்மை அவனுக்குத் தெரிகிறதா? தன் காரியத்தைத்தான் பெரிதாகக் கவனிப்பானேயன்றி, ஒரு பெரிய இடத்துக்குத் தகுந்தபடி தான் நடந்துகொண்டு போகவேண்டிய மேலான ஞானம் அவனுக்கு உண்டாகாது. ஒருவன் தன்னை மனஸ்பூர்வமாக முழுதும் நம்பிவிடுகிறான். அவனுக்கு இந்த அற்பம் செய்வதென்ன? அவனை ஏமாறவைத்தலும், மோசம் செய்தலும், நடுவில் பறித்துத் தான் லாபமடைதலுமாக இருக்குமேயன்றி, அவன் தன்னிடம் வைத்ததொரு பெரிய நம்பிக்கையைக் காப்பாற்றிக்கொண்டு பெருந்தன்மையாகச் செல்லத் தெரியாது அதற்காக அந்த அற்பத்தைக் கடிந்துகொண்டும் பயனில்லை. அதன் ஜென்மத்தில் ஏற்பட்ட குணம் அவ்வளவு தான். (தொடரும்.)

---

எவன் உன் வியாபாரத்தைத் தாழ்த்திப் பிறர் முன்னிலையில் பேசுகிறானோ அவனிடம் உதவி வேண்டிக் கெஞ்சுவதைவிட, நீயே உழைத்து வியாபாரத்தை விருத்தி செய்து வந்த, வரவில் திருப்திகொள்வது மேல். எந்த நாயின் தயவும் வேண்டாம். அவர்களிடம் பல்லிளித்து நிற்கவும் வேண்டாம்.

தற்காலத்தில் பெண்களிடம் துணிகரம் பார்க்கவேண்டுமானால் பிராமணப் பெண்களிடமும் கிறிஸ்துவப் பெண்களிடமும் தான் பார்க்கலாம். காரணம் அவர்களிடம் கல்வி நிறைந்து தமது சுதந்திரத்தின் அளவு தெரிந்திருப்பதே. அதனால் அவர்களின் வாதத்திற்குப் பதில்சொல்ல முடிகிறதில்லை.

ஒரு ஆசிரியர் தமது வகுப்பு மாதர்கள் தமது கதையில் வரும்பொழுது தங்களுக்கு இயல்பாயுள்ள நாணுதலான பெண்தன்மைகளை யெல்லாம் துறந்து விடலாமென்று எண்ணுகின்றார். இதை அக்கதையை வாசிப்போர் ஒப்புக்கொள்ள முடியவில்லை. இது ஆங்கில மொழிபெயர்ப்பின் மகத்துவமாக்கும்!

# முகம்மது நபி அவர்களின் வைபவம்.



ஆயிரத்து இரு நூறு வருஷங்களுக்கு முன்னே மக்கா நகரத்தில் முகம்மது நபி என்னும் மதாசாரியர் அவதரித்தார். அவர் பிறப்பதற்கு முன்னதாக அவருடைய தந்தை காலமாகிவிட, கைம்பெண்ணை தாயார் தான் மாமனுருடைய வீட்டிலே வந்து வசித்துக்கொண்டிருந்தார். அவரும் மருமகளேயும் பேரப்பிள்ளையையும் அன்புடன் ஆதரித்து வந்தார்.

***

முகம்மது நபியவர்கள் இளங் குழந்தையா யிருக்கையில் ஒரு தாதி அவரை எடுத்து வைத்துக்கொண்டு வளர்த்தாள். அவரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய்த் தேகசௌக்கியமும் திடகாத்திரமுமுள்ளவராக வளர்ந்துவந்தார். அப்பால் அவர் பெரியவராய்ப் போன பிறகும் இளமையில் தம்முடன் பழகியவர்களிடத்தில் அவருக்கு அபிமானம் சிறிதும் மாறவில்லே. பின் ஒரு காலத்தில் சிலர் சிறையாகப் பிடிபட்டு அவரிடத்தில் வர, அவர்களே அவர் மிகவும் பிரீதியாக நடத்திஞர். அப்படிச் சிறையாய் வந்தவர்களுள் ஒரு பெண், "நாம் கூடப்பிறந்தவர்கள் போலச் சிறு பருவத்தில் ஒன்ருய் விளேயாடினேமே; அந்த விசுவாசம் வைத்து என்னே விடுதலே செய்ய வேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள். அது கேட்டு முகம்மதுநபியவர்கள் "அப்படி நாம் ஒன்ருய் விளேயாடினேமென்பதற்கு அடையாளமென்ன" என்று கேட்க, அப்பெண் தன் முதுகிலிருந்த ஒரு காயத்தைக் காட்டி, இதோ பாரும், ஒருநாள் நான் உம்மை முதுகின்மேல் தூக்கிக்கொண்டு போனபோது நீர் என்னேக் கடித்தீரே, அந்த வடு இன்னும் மறையவில்லே யென்ருள். அதைக் கேட்டவுடனே அவருக்கு அப்போது முன்னர் நடந்த செய்தி நினேவுக்கு வந்து உடனே அவளேப் பிரீதியாக விடுதலே செய்தார்.

***

நபிகள் நாயகத்திற்கு ஏழு வயதிலேயே அன்னேயார் இறந்து போயிஞர். அந்த அம்மை போன இரண்டு வருஷத்திற்கெல்லாம் அன்புருவான பாட்டனும் கண்மூடிஞர். ஆனல் அப்பாட்டனுர் இறக்கும்போது தமது மற்ருெரு குமாரனின் வசத்தில் அக்குழந்தையை ஒப்புவித்து அவரை ஒருபோதும் கைவிடாமல் காப்பாற்றும்படி சொல்லிவிட்டு ஆவிதுறந்தார். அந்தச் சிறிய தந்தையாரும் அவ்விதமே அதிக விசுவாசமாய் இந்த அவதார பாலகனே ஆதரித்து வந்தார். இத் தேவக் குழந்தையோ அவரை நிமிஷங்கூடச் சிறிய பிதாவைவிட்டுப் பிரிந்திருக்கப் பொறுக்கவில்லே யென்ருல், அவர் அக்குழந்தையை ஆதரித்த

---

அந்த மருந்து சாப்பிடலாம், இந்த மருந்து சாப்பிடலாம், அந்த வைத்தியரைக் கூப்பிடலாம் என்று வெகு உபசாரமாகச் சொல்லிவிட்டு, எதிலும் கைகடிக்கப் பட்டுக்கொள்ளாமல் தந்திரமாய் நழுவுவோரே வெகு பேர்,

ஆதரணைக்கு இதைவிட வேறு நிதர்சனம் வேண்டுமோ?

***

ஒரு சமயத்தில் ஆபூதாலெப் என்னும் அந்தச் சிறிய தந்தையார் மகம்மது நபி அவர்கட்குத் தெரியாமல் அவரை அங்கேயே விட்டுவிட்டுத் தாம் மாத்திரம் சிரியா தேசம் போய் வரவேண்டுமென்று புறப்பட்டார். அப்போது நபிபிரான் தம்தோழர்களுடன் கூடி விளையாடிக்கொண்டிருந்தார். விளையாடுகையில் அவர் எப்படியோ சிறிய தந்தையார் ஒட்டகத்தின்மேல் ஏறுவதைக் குறிப்பாய்ப் பார்த்து ஓடிவந்து, "என்னையும் கூடவே அழைத்துக்கொண்டு போக வேண்டும்; உம்மைவிட்டு நான் இங்கே அரை நிமிஷங்கூட நிற்க மாட்டேன்" என்று பிடிவாதம் செய்ய, அவர் சமாதானப்படுத்த வேறு வழி காணாது அந்த நபிச் சிறுவனையும் கூடவே அழைத்துக் கொண்டு செல்வதானார்.

***

ஒரு நாள் ஒரு யோகி நபிபிரானின் முகக்குறியைப் பார்த்து இச் சிறு பாலகனிடத்தில் மஹா புருஷ லக்ஷணங்கள் அமைந்திருக்கின்றன வெனத் தெரிந்து சிறிய தந்தையை நோக்கி "நீர் இக்குழந்தையை ஜாக்கிரதையாகக் காப்பாற்றும்; மற்றப் பிள்ளைகளைப் போல நினைத்து உபேக்ஷை செய்யவேண்டாம்; இந்த தேவக்குழந்தை ஒருகாலத்தில் தன் தேசமெல்லாம் பரிபாலிக்கத்தக்க பெருமையை யுடையவராவார்" என்று கூறினர். அப்போது அம்மொழிகள் சிறிய தந்தைக்கு ஒரு முக்கியப் பொருளாய்த் தோன்றவில்லை. ஆயினும், பிற்காலத்தில் எல்லாம் அந்த யோகி கூறியவண்ணமே உண்மையாய்ப் பலிக்கக் கண்டு மிகவும் பூரித்தார்.

***

மகம்மது நபியவர்களின் இளமைப் பருவத்தைப்பற்றி விவரமான விருத்தாந்தமொன்றும் செவ்வையாய்த் தெரியவில்லை என்கிறார்கள். அவர் சிறிய பிதாவுடன் கூடவேயிருந்து, காபா என்னும் கோயில் பரிபாலன விஷயத்தில் அவருக்கு உதவியா யிருந்தாரென்பது மாத்திரம் தெரியவருகின்றது. காபா என்பது மக்காவில் ஏப்பிரஹாம் கட்டிய அநாதியான ஆலயமாகும். அதற்கு இவர்களுடைய வமிசத்தாரே பரம்பரையாய்ப் பரிபாலகரா யிருந்துவந்தார்களாதலால் அவ்வதிகாரம் நபிகள் பிரானின் சிறிய தந்தையாருக்கும் கிடைத்தது.

***

சிறு பருவத்திலேயே நபிகள் நாயகம் வாய்மையைக் கைவிடாதவராய் உண்மை தவறாத உத்தமரென்று அனைவராலும் கொண்டாடத்தக்கவராயினர். நுட்ப புத்தியும் விவேகமும் அவருக்கு மிகவும் அதிகம். அதனால் அவர் கணப்பொழுதேனும் சும்மா இராமல் ஏதேனும் ஒரு விஷயத்தைப்பற்றி யோசித்துக்கொண்டேயிருப்பார். கூடப்படிக்கும் பிள்ளைகள் விளையாட வரும்படி அழைத்தால் அப்போது அவர், இவ்வாறு விளையாடி வீண்பொழுது போக்குவதற்கல்ல, கடவுள் இப்பூமியில் மனிதர்களைப் பிறப்பித்தது; இதைப் பார்க்கிலும் மிகப் பெரிய காரியம் வேறென்று இருக்கின்றது என்று சொல்லிவிட்

---

எவ்வளவுக்குக் கீர்த்தியும் ஊர் மதிப்பும் பெருகுகிறதோ அவ்வளவுக்கும் நயவஞ்சகராகிப் பெட்டியில் பணம்வந்து விழுகிறதா என்ற ஒன்றைமட்டுமே முக்கியமாய்க் கவனித்துக் கொள்கிறார்கள், மற்ற எதற்கும் செவிகொடுப்பதில்லை.

டுத் தன் காரியத்திலேயே கண்ணு யிருப்பார்.

***

அவருக்கு யோக்கிய வயது வந்தபிறகு அந்நகரத்திலிருந்த கைம் பெண்ணான செல்வச்சிறுமி தன்னு டைய வர்த்தகசாலைக்கு அவரைத் தலைவராக நியமித்துக்கொண்டாள். மகம்மதுநபி சிறந்த புத்தியும் சாமர்த் தியமும் உடையவராதலால், அந்த வர்த்தகசாலையின் வியாபாரங்களை வெகு திறமையாக நடத்திவந்தார். அவருடைய திறமையையும் நன்னடக் கையையும் கண்டு அச்சிறுமி மிக்வும் மனமுவந்து அவரையே தனக்குக் கணவராக வரித்துக்கொண்டாள். இந்த அம்மையாருடன் இன்னும் பல பத்தினிகள் அவருக்குத் தேவியா ராக வாய்த்தனர்.

***

நபிகள் நாயகத்தின் காலத்திற்கு முன்னே அரபிதேசத்தில் பல மதஸ் தர்களும் பிரவேசித்து, அவரவர் தங் கள் தங்கள் தெய்வங்களை விக்கிரகங் களாக வைத்து ஆராதித்துக்கொண் டிருந்தார்களெனத் தெரியவருகின் றது. விக்கிரகங்களைப் பார்க்கப் பொறுமல் அவைகளிடத்தில் முதல் முதல் அருவருப்பு கொண்டது மகம்மது நபியவர்கள்தான். எவ் வகையிலாயினும் விக்கிராராதனம் செய்யும் வழக்கத்தை மாற்றிப் புது மாதிரியான மதமொன்று ஸ்தாபிக்க வேண்டுமென்று அதற்காகவே மகம் மது நபிகள் முக்கியமாகப் பாடுபட்டு வந்தார். ஆயினும் பதினைந்து வரு ஷங்கள்வரையிலும் அவர் குறிப்பான காரியம் ஒன்றும் செய்யாமல் ஏற்ற சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டு, ஏகாந்தமான இடங்களுக்குச் சென்று ஆலோசனை செய்துகொண்டிருந்தார்.

***

இதற்குள் அவருக்கு நாற்பது வய தாயிற்று. அதற்குப் பிறகுதான் ஒரு நாள் "நீ ஊக்கமுடையவனாகி உன் ஜனங்களுக்கு எச்சரிக்கை செய்" என்று தேவவாக்கு ஒன்று அவருக் குக்கேட்டதாகத் தெரியவருகின்றது. அதைச் செவியுற்று, அவர் தாம் எதிர் பார்த்த சமயம் வாய்த்துவிட்ட தென்று ஸந்தோஷமடைந்து அச் செய்தியைத் தக்ஷணமே தம் மனை யாட்டியுடன் சொன்னார். அந்தத் தேவியார் அதுகேட்டு இவ்வாறு செய் வதனால் ஏதாவது அபாயம் நேரிடுமே யென்று முதலில் சிறிது அச்சம் கொண்டாராயினும் உடனே தைரிய மடைந்து, "அப்படியே செய்யலாம்; இவ்விதமான நல்ல காரியம் நாம் செய் யப் புகுந்தால் கடவுள் ஒருபோதும் நம்மைக் கைவிடமாட்டார்" என்று தன் பிராணபதிக்குத் தைரியம் புகன்று, "இனி நான் உங்களைத் தீர்க்கதரிசியாக மதிக்கிறேன்" என்று உரைத்தார். 'பர்த்தாவுக் கேற்ற பதிவிரதை' இவரே.

***

பிறகு மகம்மது நபியவர்களின் சிறிய தந்தையாரின் குமாரன் ஆலி என்பவரும் இப்புதிய கோட்பாட்டுக் குள் சேர்ந்துகொண்டார். இவ்வண் ணமாக இம்மூவரும் ஒரே கருத்தாயி ருக்கையில் நபிகள் நாயகம் ஒரு நாள் தமது சிறிய தந்தையாரை நோக்கித்

---

தன் வேலையை மற்றவர்கள் செய்து கொடுப்பதில் அதில் தனக்கு சௌகரியம் இருப்பினும், தானே அந்த வேலையைச் செய்தால் இன்னும் நன்றாகச் செய்யலாம், ஆனால், சோம்பேரிக்கு வாழைப்பழம் தோலோடே!

தமது கருத்தை வெளியிட்டு, இந்தக் கோட்பாடு எங்கும் பரவும்படி செய்ய வேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அவர் அப்பொழுது அதிக விருத்தாப்பிய மடைந்ததினுல், தாம் வெகு நாளாய்ச் செய்துவந்த விக்கிரகாராதனையை விட்டுவிடுவது உசிதமல்லவென்று மயங்கி அதற்கு உடன்படாமலே யிருந்தார்.

***

அதன்பிறகு நபிபிரான் தமது கருத்தை யெடுத்து வெளிப்படையாகவே எங்கும் உபந்நியாஸம் செய்யத் தொடங்கி யாவரையும்தம்மதத்துக்கு இசைந்தவராக்க முயன்ருர். அதுகண்டு அவருடைய இனத்தாரே அநேகர் அவர் மேல் கோபங்கொண்டு காபா என்னும் கோவிலை விட்டு அவரை நீக்கிவிட்டார்கள். கண்டவர்களெல்லாம் அவர்மேல் கல்லெடுத்தெறியத் தொடங்கினுர்கள். அதுகண்டு அவர் தம் மதத்தைச் சேர்ந்தவர்களை யெல்லாம் அடுத்த கிராமத்திலேபோய் பதுங்கிக்கொண்டிருக்கும்படி சொல்லி, தாம் மாத்திரம் மக்காவிலேயே இருந்து, பின்னும் பலருக்கும் போதனை செய்து கொண்டிருந்தார். அது மக்காவுக்குப் பலர் யாத்திரையாக வருகிற சமயம். அதனுல் அப்பொழுது பிறதேசத்தவர் பலர் அவ்விடத்திற்கு வந்தார்கள். அவ்வாறு வந்தவர்களுக்கெல்லாம் மகம்மது நபிகள் தமது மதத்தைப் போதித்து அவர்களையும் அதிற் சேரும்படி வேண்டிக்கொண்டிருந்தார்.

(மறு ஸஞ்சிகையில் முடிவு.)

கபடஸ்தனே வெகு யோக்கியன் போலக் காட்டுவான். வெகு ஒழுங்காக இருப்பதுபோல் நடிப்பான். நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு யதார்த்த மனிதனுகவும் தன்னை மயக்குவான். தன்னை ஒரு முக்கியஸ்தனுகவும் உணர்த்திக் கொள்வான். தலைமைப் பதவிக்குத் தானே தக்கவனென மற்றவர் நினைக்கும்படி தாபம் போடுவான். கடைசியில் இக்கெடு புத்தி அவன் முகத்தில் பிரதிபிம்பித்து வெளிக்குக்காட்டிவிடுகிறது. ஆனுல் அவன்மட்டும் அதை அறிவதில்லை

---

அதோ விளையாடி நிற்கிற அந்தச் சிறு குழந்தைகளைச் சாமான்யமாக எண்ணிவிடாதே. அக்குழந்தைகள்தான் ஒரு குடும்பத்தின் உயிர்நிலைகளாகும். அக்குடும்பம் அவர்களை நம்பியே வாழ்கின்றது. அக்குடும்பத்தின் பழைய துயரங்களை மறைத்து சற்றுவது சந்தோஷிக்குமாறு புரிவது அக்குழந்தைகளே.



அக்கா எதிரில் இருக்கும்போதுதான் தம்பியின் சண்டை. அக்கா எங்காவது சென்றிருந்தால்—"அக்காவை இன்னும் காணுமே, எப்போது வருமோ" என்பதே தம்பியின் நினைப்பு. எவ்வளவு சண்டைதான் அவர்கள் இட்டுக்கொண்டாலும் மறு நிமிஷத்தில் அத்தனையும் மறந்து ஒன்றுகிவிடுவர்.

# உலகம் காட்டும் வழி.

## இந்த மனிதன் அந்த மனிதனிடம் போகும்போது என்ன நடக்கிறதோ, அதுவே அந்த மனிதன் இந்த மனிதனிடம் வரும்போதும் நடக்கும்.

நீ பிறரிடத்தில்
எப்படியோ
அப்படியே
உன்னிடத்தில்
பிறரும்
நடப்பர்.

அன்புக்கு அன்பு,
தந்திரத்துக்குத் தந்திரம்.
விலகலுக்கு விலகல்.
தழுவலுக்குத் தழுவல்.
உபசரிப்புக்கு உபசரிப்பு.
வந்தனத்துக்கு வந்தனம்.

## இதுவே நாம் உலகிற் காண்பது.

☞ அன்பும், பிரிவும் அவரவர் செய்கையிலே. ஒருவர் காட்டும் ஒப்பாரி அன்பு வெளிக்கு உணரப்படாமலில்லை. அவ்விதமே ஒருவர் காட்டும் உள்ளன்பும் அந்தக்ஷணமே தெரிந்துவிடுகின்றது. ஒருவன் கபடஸ்தனாய் சுயநலமாக மாறிவிடுகையில் அவன் போகிற இடத்திலுள்ளவர்களும் வெகு ஜாக்கிரதையாய் விடுகிறார்கள்; அவனிடத்தில் ஏமாறிவிடாதபடி எச்சரிக்கையாய் நடந்து கொள்ளுகிறார்கள். தான் வாய் உபசாரம் பேசி அவ்வளவுடன் அனுப்பி விட்டவர்களின் வீட்டுக்குத் தான் வருகையில் தன்னிடமும் அப்படியே தித்திப்பான வாய் உபசாரம் பேசிக் கைநழுவுகிறார்கள். எதிலும் பட்டுக்கொள்ளாதபடி ஒருவன் நடந்தால் அவன் சங்கதியிலும் மற்றவர்கள் அப்படியேதான் நடப்பர். "அவர்கள் வேறு நாம் வேறு" என்ற பேத மனதுடன் இருந்தால், மற்றவர்களும் அவ்விதமே தூர ஒதுங்குகிறார்கள். உன் மனத்திலுள்ளதை உன் வாய் சொல்லாவிடினும் உன் முகமே சொல்லிவிடுகிறது. ஒருவனை சில நாளைக்கு ஏமாற்றலாம்; சிலரைப் பலநாளைக்கு ஏமாற்றலாம்; எல்லோரையும் எப்போதுமே ஏமாற்ற முடியாது. அவரவரின் முந்திய சங்கதிகளை அவர்கள் போகிற வீட்டிலிருப்போர் மறந்து விட்டார்களென்று ஒருபோதும் எண்ணக்கூடாது. பழய பெருச்சாளிகளை உலகம் என்றும் மறப்பதில்லை. அவ்விதமே நல்லது செய்தோரையும் கடவுள் கைவிடுவதில்லை; ஞாலத்தாரும் அன்னோரை நினைக்காமலில்லை. இதில் நீங்கள் எந்த வகுப்பு—?




(336-ம் பக்கத் தொடர்ச்சி.)

451. Between the acting of a dreadful thing, and the first motion, all the interim is Like a phantasma, or a hideous dream: The Genius and the moral instruments. Are then in council; and the state of man, Like to a little kingdom, suffers then The nature of an insurrection.

ஒரு பயங்கரமான காரியத்தின் கர்மத்திற்கும், அதனுடைய முதல் பிரேரணைக்கும் மத்தியிலுண்டாகும் எல்லா இடைநேரமானது பிரமையையோ அல்லது பயங்கரமான கனவையோ ஒத்திருக்கும். அந்த விவேகியும், கொடிய அவனது மனமும் பிறகு ஆலோசனை சபையிலிருக்கிறது. அப்போது மனிதனுடைய நிலைமை ஒரு சிறிய இராஜ்யத்தில் உண்டாகும் உள்ளூர்க் கலகத்தின் தன்மைக்கு ஒத்திருக்கும்.

452. When I tell him, he hates flamerers, He says, he does, being then most flamered.

முகஸ்துதி செய்பவர்களை அவன் வெறுக்கிறான் என்று நான் அவனிடம் சொல்லும்போது, (அந்த ஒரு வார்த்தையிலேயே) அவன் நன்றாக முகஸ்துதியில் ஈடுபட்டவனாய், 'ஆமாம்' என்று சொல்லுகிறான்.

453. When beggars die there are no connects seen; The heavens themselves blaez forth the death of princes.

வறிஞர்கள் இறக்கும்போது எந்த வால் நட்சத்திரமும் தோன்றுவதில்லை. அதிபதிகள் இறக்கும்போது ஆகாயமே சுடர்விட்டெரிகிறது.

P. G. குலசேகரன்.

II

454. Men's judgments are A parcel of their fortunes.

SHAKESPEARE.

சீர்தூக்கிப் பார்க்கும் தன்மை மனிதனுடைய சம்பத்தின் ஒரு பாகமாகும். ஷேக்ஸ்பியர்.

455. The purest treasure mortal times afford, is spotless reputation. SHAKESPEARE.

குற்றமற்ற கீர்த்தியே, அழியக்கூடிய வாணாளின் சுத்தமான சொத்தாகும். ஷேக்ஸ்பியர்.

456. It is not so much the being exempt from the faults, as the having overcome them, that is an advantage to us.

ALEXANDER POPE.

நமக்கு நன்மை பயப்பது தவறுகளிலிருந்து விலகியிருக்குந் தன்மையிலல்ல; தவறுகளைத் திருத்தி ஜெயமடைவதிலேயாம்.

அலெக்ஸாண்டர் போப்.

457. Self love, my liege, is not so vile a sin As self-neglecting. SHAKESPEARE.

தற்புகழ்ச்சி, தன் நலங்களைக் கவனியாதிருப்பதுபோன்ற அத்துணை பெரிய பாவமல்ல. ஷேக்ஸ்பியர்,

458. The first duty of every man in the world is to find his true master, and for his own good submit to him, and to find his true inferior, and for that inferior's good conquer him.
RUSKIN.

உலகத்தில் ஒவ்வொரு மனிதனுடையவும் முதல் வேலையாவது :— தனக்கேற்ற ஆசானைக் கண்டுபிடித்துத் தன்னுடைய நன்மைக்காக அவ்வாசானுக்குக் கீழ்ப்படிதலும், தன் சீடனைக் கண்டுபிடித்து அவனுடைய நன்மைக்காக அவனைத் தனக்குள் வைத்துக்கொள்ளலுமாம். ரஸ்கின்.

459. Life every man holds dear, but the dear man. Holds honour far more precious dear than life. SHAKESPEARE.

ஒவ்வொரு மனிதனும் உயிரை வெல்லமாக மதிக்கிறான். ஆனால் மனிதரிற் சிறந்தவன் தன் கௌரவத்தை—தன் மேன்மையை—தன் உயிரினும் சிறந்ததாக மதிக்கிறான்.
ஷேக்ஸ்பியர்.

460. Our affections are our life. We live by these. They supply our warmth. CHANNING.

அபிமானங்களே நம் ஜீவாதாரமாயிருக்கின்றன. அவைகளே நம் வாழ்நாளுக்கு ஒரு ஆதாரசம் கொடுக்கின்றவை. சானிங்.

461. There's romance enough at home, without going half a mile for it: only people never think of it. DICKENS.

வீட்டினுள்ளேயே விசித்திரமான வாழ்க்கை இருக்கின்றது ; அதற்காக அரை மைல் நடந்துபோகவேண்டியதில்லை. இந்த ரகசியம் மனிதருக்குத் தெரிவதில்லை. டிக்கன்ஸ்.

462. Lay aside life-harming heaviness, And cultivate a cheerful disposition. SHAKESPEARE.

வாணாளை ஊறு செய்கிற அசதியை ஒதுக்கித் தள்ளிவிட்டுச் சந்தோஷந் தரும் ஊக்கத்தை விருத்தி செய்க.
ஷேக்ஸ்பியர்.

463. He that hath the steerage of my course, Direct my sail! SHAKESPEARE.

என் வழிகாட்டியாய் விளங்குகின்றவரே ! என் கப்பலைச் சரியான வழியில் திருப்புவீராக. ஷேக்ஸ்பியர்.

464. Everybody likes to do good, but not one in a hundred finds this out......no man really enjoyed doing evil since God made the world. RUSKIN.

ஒவ்வொருவனும் நன்மை செய்யவே விரும்புகிறான்; ஆனால் நூற்றில் ஒருவன்கூட இதை அறிந்துகொள்வதில்லை.......கடவுள் உலகைச் சிருஷ்டித்த நாள் முதலாக, ஒரு மனிதனும் தீமை செய்வதில் உண்மையான சந்தோஷம் அடைந்ததில்லை. ரஸ்கின்.

465. The good in this state of existence preponderates over the bad, let miscalled philosophers tell us what they will.
DICKENS.

தத்துவ சாஸ்திரிகள் என்று தவறுதலாக அழைக்கப் படுகிறவர்கள் என்ன வேண்டுமாயினும் சொல்லிக் கொள்ளட்டும் ; இந்த (வாழ்க்கை) நிலையில் தீமையை நன்மை மேற்கொள்கின்றதென்பது திண்ணம்.
டிக்கன்ஸ்.

K. C. பிச்சுமணி ஐயர்.




## நண்பர்களை நம்பிவிடுதல்.

ஐயா,

ஒரு சந்தேக நிவர்த்தி தங்களிட மிருந்து எனக்குத் தேவை. ஒருவர் தமது காரியமாக ஊருக்குப் புறப்படு கிறார். தமது வீட்டின் க்ஷேமலாபங் களை உண்மைக்கு உண்மையாய்த் தெரிவிக்குமாறு தமது நண்பர் ஒரு வரை வேண்டிக்கொண்டு அதன் முழுப் பொறுப்பையும் அவரிடம் விட்டுச் செல்லுகிறார். அந்த நண்பர் தனது கடமையைக் கூடியவரையில் செய்கிறாரானாலும், பிணிவாய்ப் பட் டுள்ள ஒருவரைப்பற்றி சில விவரங் கள் கடிதத்தில் எழுதுகிறாரேயன்றி அதிகமாக அதைப்பற்றிப் பிரஸ்தா பிப்பதில்லை. தூர இருப்பவரை உடனே புறப்பட்டு வந்துவிடும்படி வற்புறுத்தவும் கண்டித்துக் கடிதம் எழுதவும் இந்த நண்பருக்குப் பூரண உரிமை கொடுக்கப்பட் டிருக்கையில் அதை அவர் உபயோகிக்கவே யில்லை. சில சமயங்களில் எதிலும் பட்டுக் கொள்ளாமலே நல்ல பிள்ளையாக நடந்துகொண்டு போய்விடவும் பார்க்கிறார். இவருக்கு மட்டும் தெரி யும்படி எழுதியகடிதத்தைக் காட்டக் கூடாத இடத்திலும் காட்டி விட்டு அங்கும் நல்ல பிள்ளையாகிறார். அக் கடிதத்தைப் படித்தவர்களோ தம் மைப்பற்றி அக்கடிதத்தில் எழுதி யிருக்கும் விஷயங்களுக்கு மிகவும் வருந்துகிறார்கள். தூர இருப்பவரோ தமது நண்பர் தன்னை அவசரப்படுத் தாததால் வியாதி அவ்வளவு கடுமை யில்லை யென்று எண்ணி விடுகிறார். இதன் மத்தியில் வியாதியாய் இருந்தவர் இறந்து விட்டதாகத் தந் தியை வீட்டார் அனுப்புகிறார்கள். தூர இருப்பவரோ அந்த சமயம் மற் றொரு ஊருக்குச் சென்று ஒருவாரம் வரையில் இருந்துவிட்டு முன்இருந்த இடம்வர, தந்தியைக் கண்டு கதறுகி றார். இனி வந்தாலும் முகம் காண்ப தற்கில்லை. ஐயோ! நண்பன் என் னைக் கண்டித் தெழுதித் தருவித் திருக்கலாமே. உள்ள விவரம் தெளிவாய் எழுதாமற் போனாரே; அவருக்கு நான் கொடுத்திருந்த சுதந் திரத்துக்கு அவர் எது வேண்டுமானா லும் செய்யலாமே; தம்மிடம் கொடு கப்பட்ட ஒரு பொறுப்பின் கனத்தை யுணராமற் போனாரே யென்று வருந் துகிறார். பிறகு கரும கிரியைக்கு ஊர் வந்து நண்பனைக் காணுகிறார். நண்பரை அவரது பெரிய தவறுத லுக்குக் கண்டிப்பதா? அல்லது ஜாடையாய்விட்டு விடுவதா? இதற் குத் தக்க விடை விரும்புகிறேன்.

A. துப்புசாமி பிள்ளை.

***

[விடை:—உலகில் நண்பர்கள் எனப்படுவோர் பலவகைப் பட்டிருக் கிறார்கள். ஒவ்வொருவரின் ஸ்வபாவ மும் ஒவ்வொரு விதம். அவ்வவற்றிற் குத் தகுந்தபடி நடந்து சென்றால் தான் நட்பு நிலைக்கிறது. இல்லை யேல் பிரிந்துவிட நேருகிறது. என்றும் விட்டு நீங்காத ஒரு உத்தம

---

சாமர்த்தியசாலி என்பது சரிதான். அத்தகையோரின் குடும்பங்கள் தான் நாளைக்குச் சந்தியிலே தவித்து நிற்கின்றன. ஏனோ அப்படி?

நண்பனைப் பெறுதல் அபூர்வமான சம்பவம். தூர இருப்பவன் தன் வீட்டின் க்ஷேம லாபங்கட்குத் தனது நண்பனை நம்பி விடுகிறானென்பது உண்மை. வீட்டில் ஏதேனும் தொந்திரவு நேர்ந்தால் அதைக் குறைவு படுத்தியே சில நண்பர்கள் தெரிவித்துத் தாங்கள் யாவற்றையும் பார்த்துக்கொள்வதாகவும் அந்தக்கவலையே உங்களுக்கு வேண்டா மென்றும் எழுதுகிறார்கள். வீட்டின் நிலைமையோ பிரமாதப்பட்டு விடுகிறது. நண்பரோ இரண்டு தினங்கட்கு முன்பு வந்து விசாரித்துச் சென்றதைத் தவிரப் பிறகு வரவில்லை. ஆயினும் தூர இருப்பவர் வரையும் தினசரிக் கடிதங்களுக்குத் தாம் போய் விசாரித்து வந்திருப்பதாக மட்டும் உடனுக்குடன் எழுதிவிடுகிறார். பிறகு மற்றொரு நாள் நண்பரின் வீட்டுக்குச் சென்று பார்த்து வருகிறார். தாம் செய்யக்கூடிய உதவியையும் செய்து விட்டுத் தூர இருப்பவருக்கு விவரம் வரைகிறார். இது ஒருவகை. இவ்வளவுக்கு அந்த நண்பர் செய்ததில் திருப்திபட வேண்டுமேயன்றி அவர் மீது குற்றம் பேசுவதற்கில்லை. அவரது மெதுவான ஸ்வபாவம் அப்படியென்று விட்டுவிட வேண்டியது தான்.

***

இனி இன்னொரு நண்பர் உண்டு. அவரோ வீட்டில் இத்தனை கவளம் அன்னம் இன்னின்னார் உண்டார்களென்கிற விவரத்தைக்கூடக் கணக்கிட்டு எந்த சிறுசங்கதியையும் விட்டு விடாமல் தூர இருப்பவருக்குத் தெரிவிக்கிறார். வீட்டில் பிரஸவ சமயமாய் மிகவும் திகைப்பா யிருக்கையில் "உடனே கண்டிதமாய்ப் புறப்பட்டு வரவேண்டியது தான், வேறு யோசனை வேண்டாம். ரயிலிக்கு வந்து காத்திருப்பேன்" என்று கடிதம் வற்புறுத்தி எழுதிவிடுகிறார். அது தன் கடமை யென்றும் எண்ணுகிறார். இந்தக்கடிதம் மாலையில் எழுதித்தபாலுக்கு அனுப்பியபிறகு இரவு பிரசவமாகி குழந்தை பிறந்து தாயின் நிலைமை ஒரு சுகரீதிக்கு வந்து கவலை நீங்கிவிடுகிறது. இனி அச்சம் இல்லை யென்று தெரிந்ததும் மறுநாட் காலையில் தூர இருப்பவர் தனது நேற்றைய கடிதம் கண்டு புறப்பட்டு விடாதபடி—"வாவேண்டாம். ஆண் குழந்தை பிறந்து தாயும் குழந்தையும் சுகம். மற்றது கடிதத்தில்" என்று தந்திகொடுத்து விடுகிறார். தந்தி முன்னதாகத் தூர இருப்பவருக்குக் கிடைக்கிறது. அதைப் பார்த்து அவர் கவலை தீரும் சமயத்தில் உடனே புறப்படும்படி நேற்று நண்பர் எழுதிய கடிதம் கிடைக்கிறது. தந்தி வந்திராவிடில் அப்பொழுதே புறப்பட்டு விடுவது நிச்சயம். தந்தி வந்ததால் அக்கடிதம் பிரஸவத்திற்கு முன் எழுதிய கடிதமென்றும், ஆதலின் தாம் உடனே புறப்படுவதை நிறுத்தி மறுதினம் கடிதம் பார்த்துப் புறப்படலா மென்றும் தாமதிக்கிறார். அக்கடிதத்தில் தம்மை உடனே புறப்படும்படிக் கண்டிதமாய் வரைந்துள்ள வரிசைகளுக்கு இந்த நண்பனை உண்மையாக நம்பலாம். எதையும் மறைப்பவனல்ல, உள்ளதை உள்ளபடியே எழுதுகிறவன் என்று விசுவாச மனமாகிறார். மறுதினம் கடிதத்தில் சகல விவரமும் தெரிகிறது. வேலைகளை முடித்துக்கொண்டு நிதானமாய்ப் புறப்படலா மென்று அக்கடிதத்தில் கண்டிருக்கிறது. தன் முந்திய கடிதத்தால் புறப்பட்டு விடாதிருக்கவே தந்தி தந்ததாகவும் குறிப்

---

குழந்தைகள் அழுவதற்கெல்லாம் தங்களின் மார்பகத்தைக் காண்பித்து சமாதானப் படுத்திவிடுகிற தாய்மார்களின் சக்தி மஹா விந்தைக்குரிய மர்மம்.

பிட்டுள்ளது. அது தூர இருப்பவருக்குப் பரமதிருப்தியைக் கொடுத்து தமது நண்பன் தருகிற தைரியத்தில் நம்பிக்கை வைப்பவராகிறர். இது ஒரு விதமான நேசம். இந்த நண்பர் தமது நேச சுதந்திரத்தைக் களங்கமற்ற தன்மையில் அதிகாரத்தோடும் உபயோகப் படுத்தியிருக்கிறர். தூர இருப்பவரை உடனே வரச்செய்யவோ, வராதிருக்க வைக்கவோ அவரது எழுதுகோலுக்கு அத்தனை சக்தி ஏற்பட்டிருக்கிறது. அந்தச் சக்தியைக் கிரமப்படியே அவர் செலுந்தி யிருக்கிறர். அவர் செய்த கடமை சரி. இதுவே தேவை.

***

ஸ்ரீமான் குப்புசாமிபிள்ளை தெரிவிக்கும் நண்பரோ மற்றெருவித மாதிரியான மனுஷ்யர். அவர் மனது நல்லதுதான். அவரும் ஒரு உத்தமர் தான். ஆயினும், எதிலும் பட்டுக் கொள்ளாமல் விலகி, எவருக்கும் நல்ல பிள்ளையாகிவிட நினைப்பதில் தமது நேசப்பொறுப்பை யுணர்ந்து கடமையைச் செலுத்தப் பிசகிப் போகிறர். தனது நண்பனை எதிர்த்துக் கடிதம் எழுதி "ஏன் இன்னும் தாமதம், உடனே புறப்படுக" என்று கண்டித்து வரைதற்கு அவர் பாத்தியதை பெற்றிருந்தும், அவ்விதம் வரைவதில் தூர இருப்பவரின் மனம் நோகலா மென்றும், அவ்விதம் தான் ஏன் எழுதவேண்டு மென்றும், அவரது சுபாவத்திற்குத் தகுந்தபடி நடந்துகொண்டுபோய் விடுவதே சரியென்றும் எண்ணிவிடுகிறர். இதில் தன்மீதும், தனது கடித எழுத்துக்களின் மீதும் தூர இருப்பவர் எவ்வளவு பூர்ணமான நம்பிக்கை வைத்துக் காத்திருக்கிற ரேன்பதை அறியத் தவறிப்போகிறர். இந்தத் தவறுதலே தூர இருப்பவருக்கு எதையும் உண்மைக்கு உண்மை யாய்த் தெரிவிக்க தாராளமாய்க் கடிதத்தில் எழுதுகோல் ஓடாதபடி செய்து விடுகிறது. இத்தகைய மனிதரைத் தூர இருப்பவர் வந்து சந்திக்கையில் மனவருத்தமான சொற்களால் எதையும் கேட்காமலே, அவரது குணப் போக்கை மட்டும் தெரிந்து மனதில் வைத்துக்கொண்டு மேலுக்கு நல்ல வார்த்தைகளாகவே பதில் சொல்லி அம்மட்டில் விலகிக் கொள்வதே உத்தமம். இந்த தடவை இவரை நம்பப்போய், தான் அடைந்த ஏமாற்றம் தனக்கு எக்காலத்துக்கும் ஒரு நல்ல படிப்பினை தான் என்கிற புத்திமதியை மட்டும் பெற்றுக் கொள்ளட்டும். அதற்குப் பிறகு இவ்விருவர் நேசமும் அவ்வளவு விரிவு பெறமாட்டா. சுருங்கியும் போகலாம். ஏனெனில், தூர இருந்தவர் அடைந்த ஏமாற்றம் வெகு பெரிதானதால் முன்னைப்போல் அவ்வளவு நம்பி ஒட்டியிருக்க மனம் இடம் கொள்ளாது. உலகம் பலவித மென்பது போல் நண்பர்களும் பல விதமே. நண்பர்கள் எதையும் அன்புக்காகவே செய்ய வேண்டியவர்கள். அன்பு இருப்பதால் தான் தாங்கள் சம்பள ஆள்போலவும், கூலிக்காரன் போலவும் தங்களின் அன்பனுக்கு உழைப்பதை அவர்கள் அதை ஒரு தாழ்வாகவோ பேதமாகவோ எண்ணுத பெருந்தன்மை கொண்டவர்களாகிறர்கள். மற்றபடி அவர்கள் கூலிகளுமல்ல, சம்பள ஆட்களுமல்ல. அப்படி எண்ணிக் கண்டிப்பதும் மடமையாகும். உயிருக்குயிரான நண்பர்கள் கிடைப்பது—"தாரமும் குருவும் தலை விதியைப் போல" என்ற தன்மையாகவே அதிர்ஷ்டத்திற் சேற்ப அமையும். ப-ர்.]

# யார் நல்லவர்?

(319-ம் பக்கத் தொடர்ச்சி.)



ஒவ்வொரு நாளைக்கு என் தாயாரிடம் சொல்லி முறையிடுவேன். அவரோ, 'உனது அண்ணன் அலைகிறானென்று நீயும் அப்படி அலைகிறேனென்கிறாயா? அப்படியானால் தோட்டவேலை எப்படியாவது? நானும் உங்கள் அப்பனும் பாடுபடக் கூடிய வயதில் பாடுபட்டோம். அப்பொழுது நாங்கள் அடைந்த கஷ்டம் இவ்வளவு அவ்வளவு அல்ல. இப்பொழுது எங்களால் முடியுமா? நீயே உன் மனைவிக்கு இடங்கொடுத்துவிட்டாய்; உயரத் தூக்கி வைத்துவிட்டாய்; இப்பொழுது இறங்கென்று சொன்னால் இறங்குவாளா? அவள் பேச்சைக்கேட்டுப் பங்கு பிரித்துக் கொண்டு வீணாகக் கெட்டுப்போக வேண்டாம். நாங்கள் இருக்கும் வரையிலாவது ஒற்றுமையாகவே பாடுபடுங்கள்', என்று சொல்லி அனுப்பிவிடுவார். இது நல்ல புத்திமதிதான். ஆனால் என் மனம் ஆறுதலடையவேண்டுமே; அதற்கு வழியில்லை. மீண்டும் வயலிற்குச் செல்வேன். அங்கே ஆட்கள் செய்யும் அலங்கோல வேலையையும், பயிர்கள் இருக்கும் படுமோச நிலைமையையும் கண்டு கண்டு மனம் எரிவேன். அவற்றோடு சேர்ந்துகொண்டது பாழும் வானமும். இதற்கு முன்னர் மாதம் மூன்று மழை பெய்தது என்கிறார்களே! இப்பொழுது ஒரு மழையாவது பெய்யலாகாதா? மழையில்லாக் கொடுமையால் கூலி ஜனங்கள் 'சிலோன், சிலோன்' எனப் பறக்கிறார்கள். அதனால் இங்கிருக்கும் ஒருவர் இருவருக்கும் மிகுந்த கிராக்கி. கூலிதான் அதிகமேயொழிய வேலை முன்னிலும் பூஜ்யம். என்ன செய்வது? இந்த வகையில் மனம்நொந்து வீடு திரும்புவேன். வீட்டின் நிலைமையைத் தான் முன்னமேயே சொல்லியிருக்கிறேனே; இருந்தாலும் இப்பொழுது வேறொருவகை! நான் மனம் உடைந்து என் தாயாரிடத்துச் சொன்னதும், அதற்கு அவர் பதில் கூறியதும் எப்படியோ என் மனைவிக்கு எட்டிவிடும். எவ்வளவு இரகசியமாயினும் வெளியே பலரறியுமாறு செய்வதற்குச் சில பெண்கள் கங்கணங் கட்டிக்கொண்டிருக்கிறார்கள். அது கிடக்கட்டும்; மாலை ஏழு மணிக்கு வீட்டிற்குப் போகிறேனா; அங்கே அவள் சோற்றைச் சமைத்து வைத்துவிட்டு ஒரு மூலையில் படுத்துக்கொண்டிருப்பாள். நானும் ஒன்றும் பேசாது ஒருநாழிகை இரண்டுநாழிகை தாமதிப்பேன். அவள் எழுந்திருப்பதில்லை. அப்பொழுது எனக்கு வரும் கோபம் இவ்வளவு அவ்வளவு அல்ல. கோபத்தில் சிறந்தவர் விஸ்வாமித்திரர் என்கிறார்களே; அவரும் அதுபொழுது எனக்குப் பின் நிற்கவேண்டியவர்

---

மற்றவர்களை நம்பி எதிர்பார்க்கிறவன் தன் சுயசக்தியை மறந்துவிடுகிறான். அவர்கள் கைவிட்டு விலகி விடும்போதுதான் தானே உழைத்துத் திறமையுள்ளவனாகவும் சக்திவந்தனாகவும்ஆகிப் புதிய சுறுசுறுப்பு கொள்கிறான்.

தான். நண்பா! என்ன செய்யட்டும்? பாழுங் கோபம் எப்படியோ தலைகால்தெரியாமல் வந்துவிடுகிறது. அப்பொழுது இன்னது செய்கிறேன், செய்யப்போகிறேன் என்றுகூடத் தெரிவதில்லை. நானும் கோபத்தை அடக்கி யடக்கித்தான் பார்க்கிறேன்; முடியவில்லை. இனி விஷயத்தைச் சொல்கிறேன். அப்படித் தலைகால் தெரியாமல் கோபம் வந்துவிடுகிறதா; அதுசமயம் என் மனம் நினைப்பதை யெல்லாம் இப்பொழுது சொல்ல நேரமில்லை; எனினும் கொஞ்சம் சொல்கிறேன். 'இந்த முண்டை யோடு எத்தனை நாளைக்கு இப்படி வாழ்வது? எவ்வளவு துணிவு? எவ்வளவு அகங்காரம்? கொஞ்சமாவது புருஷனென்று மதிக்கிறாளா? நான் வரும்பொழுது உட்கார்ந்துகொண்டிருந்தாலும், படுத்துக்கொண்டிருந்தாலும் எழுந்து நின்று மரியாதை செய்வதென்பதே கிடையாது. முற்காலத்தில் நளாயினி இருந்தாள், தமயந்தி இருந்தாள், சந்திரமதி இருந்தாள், கண்ணகி இருந்தாள்; அடடா, என்ன அவர்கள் தங்கள் புருஷர்களிடத்தில் காட்டிய பணிவு! அடக்கம்! அன்பு! ஆகா, அவர்களல்லவா பெண்கள்! பெண்மணிகள்! இவளைப்போலவா?' என்று பழைய கதைகளெல்லாம் வரிசையாக என் மனதில் வந்துநிற்கும். பின்பு அவளிடம் சென்று, 'ஏண்டி; என் இப்படி யென்னைச் சித்திரவதை செய்கிறாய்? முற்காலத்தில் நள மகாராஜன் சூதாட்டத்தில் செல்வமெல்லாம் இழந்து, பெண்சாதியையும் காட்டில் விட்டுவிட்டுச் சென்றும், அவன் மனைவி 'ஐயோ! என் கணவன் எங்கு சென்றாரோ? என்ன கதி நேர்ந்ததோ?' எனத் தன் புருஷன் மீதே நினைவாக வருந்தியதும்; அரிச்சந்திரன் தன் நாட்டை விஸ்வாமித்திரருக்குத் தானம் பண்ணியதுமல்லாமல், தன் மனைவியையும் ஓர் பார்ப்பானுக்கு அடிமையாக விடுத்தும், அவன் மனைவி 'என் நாயகரை யென்று காண்பேன்? ஈசா! அவருக்கு எவ்வித தீங்கும் வாராமல் காப்பாற்று' என அல்லும் பகலும் வருந்தியதும் கேட்டதில்லையா? அவர்களைக் காட்டிலும் நீ ரொம்ப பெரியவளா?' என்பேன். நான் அப்படிச்சொல்லி வாய் மூடுகிறேனோ இல்லையோ, அதற்குள் அவள் 'நான்தான் புருஷனுக்கடங்காத பிடாரி; நீங்களாவது அரிச்சந்திரனைக்காட்டிலும் நளமகாராஜாவைக் காட்டிலும் பெரியவராக இருந்தால் சரி;' என்பாள். வெந்த புண்ணில் வேலிட்டது போல இருக்கும் எனக்கு. உடனே ஓடி ஒரு உதை உதைப்பேன். 'ஐயோ! ஐயோ! என்னைக் கொல்கிறனே! நாசமாய்ப் போக.........என்று ஊரே கேட்கும்படியாகப் பெருங்குரல் போட்டு விடுவாள். எனக்கு நாடியெல்லாம் ஒடுங்கிவிடும். பேசாமல் உட்கார்ந்து விடுவேன். எனது தாயார், அண்ணன், ஊரார் எல்லாரும் வந்து கூடி விடுவர். கூட்டம் மிகமிக; என் மனைவி என்மீது வசைபுராணம் புதிது புதிதாகப் பாடத்தொடங்குவாள். அப்பொழுதுதான் பாழுங் கோபத்தால் வரும் தீங்கை யுணர்வேன். எனது அண்ணன் மற்றவர்களிடத்து 'என் தம்பி கொஞ்ச நாளாகவே ஒரு மாதிரியாக இருக்கிறான். வயலிலும் கவனித்து வேலை

---

மனம் கலந்து பழகி முகங்காணாது பரஸ்பரம் வெகு தூரத்திலிருந்து ஒருவர் கடிதத்தை யொருவர் ஆவலாய் நோக்குவோர்,—அவர்கள் கடிதத்திற்கே தவித்துக் காத்திருப்பவர்களாதலின்,—அத்தகையோருக்கு மட்டும் தனக்கு எவ்வளவு அதிகவேலை இருப்பினும் உடனே வரைதல் அவசியமாம்.

பார்ப்பதில்லை; வீட்டிலும் இந்தக் கோலம் செய்கிறான்' என்று என் மனைவி பக்கம் சேர்ந்து பேசுவார். அதுதான் சாமர்த்தியமான தந்திரம்! என் தந்தையும் அந்தப் பல்லவியைத்தான் பேதமையோடு பாடுவார். ஊராரும் 'இருந்தாலும் உனக்குப் புத்தி போதாது' என்று என்னைத்தான் குறை கூறுவார்கள். எனது தாயார்மட்டும் 'அவள்தான் முன்னைய மாதிரி இல்லை; வரவர மிகப் பெரியவளாகிவிட்டாள். நீதான் அடங்கி ஒடுங்கி நடந்துகொள்ள வேண்டும்; என்று இதற்கு முன்னமேயே சொல்லி யிருக்கிறேனே' என என்பால் பரிந்து பேசுவார். நண்பா! இன்னும் எதற்காக விஷயத்தை வளர்க்கவேண்டும்? நான் கூறக்கூடியவை இவ்வளவுதான். சதா இத்தகைய துன்பங்களாலேயே என் மனம் பீடிக்கப்பட்டுப் புண்ணுகிறது. என் மனதறிய ஒருவர்க்கும் தீங்கு நினைத்திலேன். என் வீட்டில் உள்ள மற்றவர்களிலும் நான் மிகுதியாக வுழைத்தும் என்னைத்தான் கேட்டவன் என்கிறார்கள். இதனால் என் மனம் கலக்கமுற்று 'தற்கொலையாவது செய்துகொள்ளலாமா?' என்று நினைக்கிறது. என் வீட்டில் தவறு புரிபவர் யார்? நல்லவர் யார்? என்று நீ தான் சொல்லவேண்டும் எனக் கூறி முடித்தார்.

நான் என்ன பதில் சொல்வேன்? நெடுநேரம் சிந்தித்தேன். "பெண்களுக்கு இயற்கையிலே பேதையர் என்னும் பெயருண்டு; ஆதலின் ஆடவர்தான் எல்லாவற்றையும் அனுசரித்து நடக்கவேண்டும். பெரியவர்கள் தாங்களும் வேலைசெய்யாது, சிறியவர்களிடத்து வேலை வாங்குவதோடு அதிகாரமும் செய்கிறார்கள் என்று நாம் பொறுமையிழத்தல் கூடாது. அவர்களும் நம்மைப்போல இருந்த பொழுது கஷ்டப்பட்டுத்தான் இருப்பார்கள்" என்று மற்றவர்களை நல்லவராக்கி, எனது நண்பரிடத்துத் தவறு காண்பேனாகில் முன்னமே ஊக்கமும் உற்சாகமும் குறைந்திருக்கும் அவர் இன்னும் அதிகமாக மனம் ஒடிந்து போவார். அங்ஙனமன்றி 'அறிவில்லாத ஒரு பெண்பிள்ளைக்காகவும், வலிமையிற் குறைந்து வயதில் நிறைந்த மூத்தோர்களுக்காகவும் அறிவு ஆற்றலில் சிறந்த நீ அஞ்சுவது அழகல்ல' எனக் கூறின், இச்செய்தி அவர் வீட்டார்க்கு எட்டியதும், அவர் மீது அவர் வீட்டார்க்கு வெறுப்பு இன்னும் அதிகமாவதோடு, என்னையும் தூற்றத் தொடங்கிவிடுவர். ஆதலின் யாது கூறுவது என நீள நினைந்து 'நண்பரே! ஒருவரையும் தவறுடையவர் என்று கூறுவதற்கில்லை; எல்லோரும் நல்லவர்தான். ஆனால் இதுபொழுது உமக்கும் மற்றவர்க்கும் 'கிரகம்' போதாதென்றுதான் கூறவேண்டும்; எனினும் இது நீடித்து நிற்காது. விரைவில் அனைவர்க்கும் நன்மை பெருகி தீமையழிய இறைவனை வணங்குகிறேன்' என்று இங்கும் படாமலும் அங்கும் படாமலும் கூறினேன். இதைச் செவிமடுத்த எனது நண்பர்க்கு மகிழ்ச்சி குன்றியது. 'இவ்வளவுதூரம் எடுத்துக் கூறியும் எல்லோரையும் நல்லவரென்றே மழுப்பிவிட்டாய்' என வெறுப்போடு கூறினர். யான் கூறிய இம்மொழி அவர் வீட்டார்க்கும் எட்டியது. அதனால் அவர்களும் ஒவ்வொருவராகத் தாமே நல்லவரென்றும், மற்றவர் அல்லாதவரென்றும், அதற்கிணங்க என் மொழியில்லாமையால் அவர்களும் என்னை வெறுக்கத் தலைப்பட்டுளர். எல்லோர்க்கும் நல்லவனாக முயன்று அனைவர்க்கும் பொல்லாதவனானேன். இதைக் கண்ணுற்ற அன்

பர்களாவது எனது நண்பரின் வினாவிற்கு ஏற்ற விடையளிக்க முற்படுவாராக.

பெ. இராமாநுஜ ரெட்டியார்.

[இதற்குத் தக்க விடை அநுபவ பூர்வமாய் வருமிடத்து, அது தகுதியுடையதாயின் பிரசுரிக்கச் சித்தமாயிருக்கிறோம். ப-ர்.]

## நகை ஆசையிலுள்ள நஷ்டங்கள்.

நம்பிக்கையுள்ளவரென்று நினைத்து ஒரு ஆசாரியிடம் மோதிரத்தையும் அதை ஒட்டுவதற்குப் பொன்னையும் தரப்போனால், அந்தப் பொன்னில் கால்பகுதியை வெட்டி ஒட்டிவிட்டு, மிச்சத்தைக் கேட்கையில் எல்லாப் பொன்னையும் மோதிரத்துடன் சேர்த்து ஒட்டிவிட்டதாகச் சொல்லுகிறார். பிறகு மற்றொரு மோதிரத்தை வெட்டி ஒட்டிச் சிறிதாக்கும்படி தர, அதை ஒட்டுவதற்குப் பக்கத்திலுள்ள பொன்னை எடுக்கிறார். அந்தப் பொன் முன்பு வெட்டியதின் மிச்சமல்லவா வென, முன்பு 'பொன்னே இல்லை' யென்றவர் இப்போது அந்தப் பொன்தான் என்கிறார். பிறகு அந்தப் பொன்னில் பாதியை வெட்டி இரண்டாவது மோதிரத்தை ஒட்டுகிறார். பின் அந்த மிச்சப் பொன்னைக் கேட்க, அவர் இரண்டாவது மோதிரத்துடன் சேர்த்தாய்விட்டதென்று பழயபடி பாட்டுப் பாடுகிறார். அந்தப் பக்கம் பாருங்கள் என்று வற்புறுத்திய பிறகு வருத்தத்துடன் தமது சொத்தையே தூக்கித் தருவதுபோல் எடுத்துக் கொடுக்கிறார். கண்ணைத் திறந்தபடி பக்கத்திலிருந்து பார்க்கையிலேயே இப்படிச் செய்தால், பாராதபோது எவ்வளவு பொன் வெட்டப்பட்டு அதன் எடைக்குச் சரியாகத் தாமிரம் சேர்க்கப்படுமோ? நகையாசையில் தட்டாச்சாரி எடுப்பது பாதி! தேய்ந்துபோவது பாதி! மிச்சத்தை விற்கப்போனாலோ சராப்கடைச் செட்டியார் நல்ல தங்கமல்லவென்று விலை குறைத்துக் கேட்கிறார்! ஒரு காசுமாலை ரூபாய் 387—8—0 ஆனால், அது ரொக்கமாக இருந்தால் வருஷத்திற்கு 100க்கு 5-ரூபா வட்டி வீதம் ஐந்து வருஷத்தில் வட்டியும் முதலுமாக ரூபாய் 500-க்கு உயர்ந்துவிடுகிறது. காசுமாலை தேய்வதைத் தவிர இப்படி உயருகிறதா? வட்டி நஷ்டத்தோடு இன்னும் எத்தனையோ விதங்களில் நஷ்டங்கள்! எவ்வளவு நஷ்டமானாலும் பெண்களைத் திருப்தி படுத்துவதற்காக அவ்வளவையும் பொறுத்துக்கொள்ள நேருகிறது! "சுவருக்கு மண்ணிட்டுப் பார், பெண்ணுக்குப் பொன்னிட்டுப் பார்" என்கிற பழமொழிவேறே எதிர்ப்பட்டு மூஞ்சியில் இடிக்க வருகிறது!

# ஒலி காட்டிக் கருவி
## (டெலெபூன்)



உண்மையி லிருக்கிற புதுமை கட்டுக் கதைக்குக் கிடையாது. சாஸ்திர அறிவு பெற்ற பெரும்பேறுகளில் ஒலிகாட்டிக் கருவியுமொன்று. முதல் முதல் நமது வாயினின்றும் பேச்சு எப்படி உண்டாகிறது? இந்தப் பேசுந் திறமையைக் கடவுள் கொடுத்திருப்பதினு லல்லவோ மன்னுயிர்களுக்கு மற்ற ஜீவன்களை விட ஒரு ஏற்ற முண்டாயிருப்பது? இரண்டு கம்பங்களுக்கு நடுவே ஒரு தந்திக்கம்பியை இழுத்துக் கட்டி விட்டு அதை விரலால் தட்டினுல், அப்போது அதினின்றும் ஒரு மதுரமான சத்தம் உண்டாகிறதல்லவா? தம்புரு வீணை முதலிய கருவிகளில் நாத முண்டாவதும் இப்படியே. அதன் கம்பியை நாம் அப்படி இழுத்து விடுவதினுல் சத்தம் என் உண்டாக வேண்டு மென்கிறீர்களோ? நாம் அந்தக் கம்பியைத் தட்டும்போது அது சாசர வென்று முன்னும் பின்னும் ஆடி, அங்குள்ள ஆகாயத்தைப் படபடவென்று அடிப்பதனுல் அந்த நாதம் உண்டாகிறது. அப்படி உண்டாகிற சத்தங்களைத் தான் நாம் ஸங்கீதம் என்கிறேம்.

***

உலகத்திலுள்ள பலவிதமான ஸங்கீதக் கருவிகளுள்ளும் மிகவும் திருத்தமான கருவி மானிடர்களுடைய வாக்கு. மற்ற ஸங்கீதக் கருவிகளைப் போலவே இந்தவாக்கும் ஸங்கீத முண்டாக்குவது மேற் சொல்லிய விதமான ஆட்டத்தினுலே தான். வீணை முதலியவற்றில் ஆடுகிற கம்பிபோல நமது வாக்கில் ஆடத்தக்க கருவி என்ன இருக்கிறதென்று கேட்கலாம். சுவாஸக் குழாய்க்குள் நன்றய் இறுக்கிக் கட்டிய தந்திக் கம்பி போன்ற ஒருவிதக் கருவி யுண்டு; அது நாம் பேசத் தொடங்கும்போது நமது முயற்சியால் உள்ளிருந்து எழுகின்ற வாயுவினுல் வீணைக்கம்பி ஆடுவதுபோல ஆட்டப்படுகின்றது. அதனுலே தான் நமது வாக்கினின்றும் ஒலி உண்டாகின்றது. உதடு நாக்கு முதலிய கருவிகளின் துணையால் அந்த ஒலி வெவ்வேறெழுத்து வடிவமாக வெளிப்படுகின்றது.

***

காந்தம் தான் ஒலிகாட்டிக் கருவிக்கு முக்கியமானது. பெல் என்கிற பண்டிதர் ஏதோ ஒரு காரியத்திற்காகத் தன் படிப்பை விருத்தி செய்து கொண்டிருக்கையில், கடைசியில் தற்செயலாய் இந்த ஒலிகாட்டி யந்திரத்தைக் கண்டறியும்படியாயிற்று. இப்படிச் சாஸ்திர பரிசோதனைகள் செய்யும்போது முதலில் ஆரம்பித்த வழியைவிட்டு, வேறொரு

---

சாலையில் நான்கு மணிக்கு எழுந்தவன் ஏழு மணிக்குள் தன் முக்கிய வேலைகளை முடித்துக்கொண்டு சுறுசுறுப்பாய் இருக்கிறன். ஏழு மணிக்கு எழுந்திருப்பவனே தன் வேலைகளை முடிக்கமுடியாத சோம்பேரி யாவான்,

கிளைவழியிற் சென்று, அங்கே ஒரு பெருத்த நிதியைக் கண்டு, முதலிற் சென்ற மார்க்கத்தை மறந்து போவது வழக்கமே. பெல் என்பவர் முதலில் உயிரொழுத்துகளின் சத்தம் எப்படி உண்டாகிற தென்று விசாரிக்கத் தொடங்கி, அது காரணமாகத் தந்திக் கம்பிகளின் வழியாய்ப் பேச்சுகிற பேச்சுகூடக் கேட்கக்கூடு மென்று பரிசோதிக்கலானூர். பின்பு மின்சாரங்களைப் பரிசோதிக்க ஆரம்பித்து அதைக் கொண்டு அநேகம் சருவிகள் தயாரித்துக் கடைசியாக சுலபமான யந்திரமொன்று செய்து முடித்தார். இந்தக் கருவியில் சொற்களின் அலைகள் மின்சாரத்தின் அலையாகமாறி வெகுதூரம்போய் அங்கே வைத்திருக்கிற கேட்குங் கருவியில் மறுபடி சத்தமாக மாற்றப்படுகின்றது. ஒரு தந்திக்குள்ளாவது அதன் பக்கத்திலாவது காந்தம் இருக்குமானுல், அது அந்தத் தந்தியில் மின்சாரத்தை உண்டுபண்ணு மென்று பாரடே என்பவர் கண்டுபிடித்த விசேஷத்தின் நுட்பத்தாலேதானே முக்கியமாய் இந்தக் கருவி கண்டுபிடிக்கப்பட்டது.

***

ஒலிகாட்டிக் கருவியினின்றும் வருகிற தந்திகள் நடுவே ஒரு பெட்டியில் பூட்டப்பட்டிருக்கின்றன. அந்தப் பெட்டியில் இருக்கும் பிடியால் திருப்பக்கூடிய சுழல் யந்திர மொன்று உண்டு. அது மற்றோர் இடத்திலிருப்பவனுக்கு சமாசாரம் வருகிற தென்று எச்சரிக்கையாக முன்னதாய் மணியடிக்கின்றது. பிறகு பேசுவதற்கான ஒரு கருவியை வாயிலும், அந்தப் பேச்சுக்குப் பதில் உத்தாரத்தில் ஒரு வார்த்தைகூட விட்டுப் போகாமல் கேட்பதற்காகச் சித்தமாய் மற்றொரு கருவியைக் காதிலும் வைத்துக்கொண்டு பேசத் தொடங்குகிறூர்கள். ஆதியில் தந்தித்தபால் ஏற்படுத்திய போது முதலில் போக ஒன்று வர ஒன்ருய் இரண்டு தந்திகளை உபயோகித்து, பின்பு சாஸ்திர நுட்பங்கள் விசேஷமாய்க் கண்டறியப் பட்டதினுல் ஒரே தந்திக் கம்பியிலேயே போக்குவரவு செய்யத் தொடங்கினர். அந்த ஸாதகத்தை இந்த ஒலிகாட்டிக் கருவியிலும் உபயோகித்து, செய்தி போவதும் வருவதும் ஒரே கம்பியாலேயே நிறைவேறும்படி செய்திருக்கிறூர்கள். குழந்தைகள் முதலில் நகர்ந்து, தவிழ்ந்து நின்று, நடந்து, பின்பு ஓட ஆரம்பிப்பதுபோல், நாமும் தெரியாத விஷயம் எதையும் கொஞ்சங் கொஞ்சமாய்ப் படிப்படியாகக் கவனித்து வந்தால் பிறகு அவை மனதிலும் நன்ருகப் பதியும். ஒன்றின்பின் ஒன்ருக ஒவ்வொரு விஷயங்களையும் சுலபமாய் அறிந்துகொண்டு போகலாம். நாம் காண்கிற ஒவ்வொன்றினுடையவும் ஆதி உற்பவ வரலாற்றினைத் தெரிந்து வைத்திருப்பது அறிவுப் பெருக்குக்கு மிகவும் உதவியாகும்.






1. கோயிலுக்குச் சென்றால் பிரஸாதமாவது கிடைக்குமென்ற நினைவு கோயிலைச் சேர்ந்த அர்ச்சகர், குருக்களுக்குமட்டுமே தோன்றும். மற்றவர்கட்கு விலையின்றித் தருவாருமில்லை. அந்த நினைவுமில்லை.

2. என்ன காசு, பணம், தின்பண்டம், பலகாரம் வாங்கி மற்றவர்களின் குழந்தைகளுக்குக் கொடுத்தாலும் நம்மிடம் காரியம் முடிந்தவுடன் தன்னவர்களுடன் ஓடிவிடுகின்றன.

3. எவ்வளவுதான் ஒரு பிரபு பணம் கொடுத்தாலும் தாசிக்குத் தன் நட்டுவன்மேலுள்ள அன்பும் நம்பிக்கையும் பிரபு மீது உண்டாவது இல்லை. பணம் பறிக்கும் வரையுமே பிரபு மீது பிரீதி. எவரும் வராவிடின் நட்டுவனாரே மனோகர நாயகன்!

4. சிலர் ஸதா நம்மைப்பற்றித் தூஷிக்கிறார்கள். நமது காதில் விழுந்து அவர்களைப் போய்க் கேட்டால் நான் எதும் சொல்லவில்லையே என்கிறார்கள். மறுபடியும் தங்கள் பிரசாரத்தையே செய்கிறார்கள்!

5. "அவள் இவனை வைத்துக் கொண்டிருக்கிறாள்" ———— "இவள் அவனுடன் பேசிக்கொண்டிருந்ததைக் கண்ணால் கண்டேன்" என்று கதை கட்டிவிடுவதில் சிலர் வெகு ஸமர்த்தர்கள். இவர்களைவிட்டு விலகவும் முடியவில்லை; விடவும் முடியவில்லை.

6. அடுத்த வீட்டு ஸ்திரீயைப் பற்றி நம்மிடம் கெட்ட எண்ணத்துடன் பேசிக்கொண்டிருந்த கிருஷ்ணனை நாம் பகைத்துக் கொள்ளப் போக, அவனே அடுத்த வீட்டு ஸ்திரீயை நாம் இழிவாகப் பேசியதாக அபாண்டமாய்க் கூறிக் கலகக் கொள்ளி வைத்துவிடுகிறான்; அவன் சொல்லைத்தான் யாவரும் நம்புகிறார்கள்.

7. ஒருவன் ஒரு ஸ்திரீயைக் காதலித்துக்கொண்டிருக்க, அதே ஸ்திரீயை அவன் சிநேகிதனும் காதலிப்பதாகக் கூறுகிறான். காதல் நிறைவேற வழிகளும் கேட்கிறான். இது மிக்க மனவேதனையும் தவிப்புமாம்.

8. "நான் சொல்வதற்கு நீ இணங்கினால் உண்மையான நண்பனென மதித்து உயிரையும் கொடுக்க அஞ்சேன்; இன்றேல், எனது துக்கம் —கண்ணீர் — கோபம் — ஆத்திரம் இவைகள் நீங்கா"—என்று நண்பரொருவர் எழுதுகிறார். அவருடன் இணங்கியே தீரவேண்டி வருகிறது.

9. தன்னைக் காதலிப்பதாக நினைத்து ஒரு ஸ்திரீயுடன் ஒருவன்

---

தனக்கு வேண்டியவர்கள் எல்லோரும் சூழ்ந்திருக்கையில் உபசாரங்களோடும் மரணபுரம் சேர்கிறவனை அற்பாயுசுக்காரன் என்கிறார்கள். நீண்ட நாள் இருந்து, தனக்கு வேண்டிய யாவரும் தன் கண்ணெதிரிலே மடிய, எவரும் துணையின்றித் திக்கற்றுக் கிடப்பவனைப் பாக்கியசாலி என்பதா?

காமபரவசமான வார்த்தையொன்று சொல்லப்போக, அப்பெண்மணியோ, "நீ இப்படிப்பட்டவனென நினைக்கவில்லை" என்று மனக்கொதிப்புடன் மறுமொழி கூற, இவன் மன்னிப்பு கேட்டு விஷயம் வெளிவராமல் அடக்குவதற்குப் பட்டபாடு தெய்வம் அறிந்துவிட்டது!

10. பத்துதாம் பொறுமையுடன் சகித்தாலும் பதினோராம்தரம் நம்மையறியாமலே துஷ்டத்தனம் செய்யும் குழந்தைமீது சீறிவிழும்படி செய்கிறது. ஆயினும் ஒன்று; அக்குழந்தையின் தாயார் எங்காவது சென்றிருந்தால், அது அழாதிருக்க அந்த சீறுதலையும் நமக்குள் அடக்கிக்கொள்ள வேண்டி வருகிறது. குழந்தை சந்தோஷமாய் விளையாடியபடி இருக்க வேண்டுமென்பதே நம்முடைய அப்போதைய முக்கிய நினைவாகிறது.

11. "நான் திருடினேன், சுருட்டு குடித்தேன் என்று யார் உன்னிடம் கூறினார்கள்; ஆளைச் சொல்லு; அவனைக் கேட்கவில்லை" யென்கிறார்கள். அப்படித் தெரிந்துகொள்வதில் அவ்வளவு சிரத்தை ஏனோ?

12. பிரமசாரியான ஒருவர் தனக்கு இனிவரப்போகும் கலியாண சுகங்களை எண்ணி வாயூறி ஆசை பெருகி மனக்கோட்டையைக் கட்டிக்கொண்டிருக்குங்கால், தனக்கு வாய்த்த மனைவி கற்பு தவறுகிறவளென்றும், எப்போதுமே அவள்மீது தனக்குச் சந்தேகமென்றும், கல்யாணக் கஷ்டமே மனிதனுக்கு உதவாதென்றும் ஒருவர் கட்டியழ வந்தாராம்! அவரவர் பாடு அவரவர்க்கு.

13. மற்றொருவரின் மனைவிக்கு ரகசியக் கடிதம் எழுதிவிட்டோமென்று ஒருவன் பூரிக்கிறான். பிறகு மற்றொரு நாள் இவன் தன் பெட்டியைத் திறக்கையில் அந்த மற்றொருவன் இவன் மனைவிக்கு "உன் கணவனுக்கு என் மனைவிமேல் இச்சை; எனக்கோ உன்மேல் இச்சை" என்று எழுதியுள்ள கடிதம் தென்பட்டுவிடுகிறது. இவன் பாய்க்குள் நுழைந்தால் அந்த மற்றொருவன் கட்டிலிற்குள் ஏறுகிறவனாயிருக்கிறான். வாயைத் திறக்கவோ முடியவில்லை.

14. வாழையிலை கிராக்கி என்று நூறு ரூபாயில் வெள்ளித் தட்டு செய்துவிட்டார்கள்! ஒரு ரூபா வட்டி வரக்கூடிய தட்டின் கிரயத்துக்கு தினம் 4-பேர் சாப்பிடக்கூடிய வாழையிலை வாங்கலாம். மேலும்வாழையிலை காணமற் போகாது. வெள்ளித்தட்டோ சற்று மறந்தால் போதும்! இது பணப் புஷ்டி செய்கிற வேலை. விலைக்குத் தகுந்த கவலைச் சுமை.

15. தட்டுகளில் சாப்பிடுவதில் அவை கொல்லைப் புறங்களில் சுத்தி செய்யப்பட, அவற்றிலுள்ள சோறு சாக்கடைக்குச் செல்கிறது. இலையில் புசிப்பின் அது வீதியில் எறியப்பட்டு அதை எதிர்பார்க்கும் நாய்கள் உண்டு பிழைக்கும். இலையில் புசிக்கும் முன்னோர் விதியிலிருந்தும் நாம் புரண்டுவிட்டமையால் தான் எச்சிலை கிடைக்காது நாய் ஏங்குவதுபோல நாமும் நாயாய் உத்தியோகம் கிடைக்காது ஏங்கித் திரிகிறோம்!

16. வீட்டுக்கு வந்து ஒரு மாதம் பெரிய தொலையாத சுமையாய் உட்

---

ஒரு நாள் முழுதும் வேலைசெய்பவனுக்குப் பத்து ரூபாய் சம்பளம், இரண்டொரு மணிநேரம் வேலை செய்பவனுக்கோ நூறு ரூபாய் சம்பளம். வேலை செய்யும் கால அளவைப் பொறுத்துச் சம்பளமல்ல. வேலையின் திறத்திற்கும் சாமர்த்திய அநுபவத்திற்கும் உயர்வுக்கும் தக்கபடி சம்பளமாம்.

கார்ந்துவிட்ட ஒருவர் போதாக் குறைக்கு வண்ணான், பரியாரி, காபி ஹோட்டல் கடன்களையெல்லாம் வைத்துப்போய் விடுகிறார். கடன் கொடுத்தவர்களோ நமது மடியைப் பிடிக்கிறார்கள், வெட்டிப் பிண்டத் துக்கு இது வட்டியோ ?

17. உண்மையாகக் கொலை செய் தவன் சாமர்த்திய வக்கீலினால் விடு தலையடைய, கொலையுண்டவன் வீட் டாருக்கோ மனிதன் போனதோடு நியாயமும் கிடைக்கவில்லை. எம். ஏ. படித்தவருக்கு சிபாரிசு இல்லாததால் உத்தியோகம் கிடைக்காதுபோக, அதே உத்தியோகத்தில் சிபாரிசு காரணமாக ஒரு பி. ஏ. நியமிக்கப் பட்டு விடுகிறார். நியாயம் வேறு, சட்டம் வேறு.

18. பகலில் ஈ உபத்திரவமும், இரவில் கொசுவின் உபாதையுமாக இருந்தால் அந்த வீட்டில் எந்த சம யத்தில்தான் தூங்குவதோ ?

19. தன்னைப் பாலியத்தில் காத லித்த ஸ்திரீ இப்பொழுது பழைய அன் பையே தன்னிடம் வைத்திருக்கி றாள் என்று இவன் எண்ணப்போக, அவளோ தனக்கு விவாகம் நடந்து கணவன் கிடைத்தவுடன் பழைய ஆசைகளை மறந்து புதிய ஆசைகளு டன் அக்கணவனோடு வாழ்கிறாள். இவன் எதிர்ப்பட்டாலும் பேசுவ தில்லை. எங்கு பழைய ஆசையைக் காட்டிவிடுகிறானோ வென்று திகிலு டனும் ஒதுங்குகிறாள்.

20. ஒருவன் ஒரு ஸ்திரீயைக் கவனித்ததை மற்றவர்கள் அறிந்து விட முடிகிறது. ஆனால், அந்த ஸ்திரீ இவனை உற்று நோக்கியதை அந்த சமயம் அவள் அருகிலிருந்த பெண்கள்கூட அறிந்துகொள்ள முடி கிறதில்லை. ஸ்திரீசாகஸம் வெகு பெரிது.

21. "தயவுசெய்து இனி எனக்கு எந்தக் கடிதமுமே எழுதவேண்டாம் என்று மிகவும் மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். அது என்னைச் சந்தி யில் நிற்கவைக்கும்" என்று வரைந்த னளாம் ஒரு நங்கை. அதனால் அன்று முற்றிலும் ஆகாரம், நித்திரை இரண் டையும் தியாகம் செய்துவிட்டாராம் ஒருவர் !

22. வேலையிலிருந்து தள்ளப்பட் டவர்களிற் சிலர், தாம் வேலையை ராஜிநாமா செய்ததாகவும், ரஜாவில் இருப்பதாகவும், பெரியபுளுகு அளக் கிறார்கள் !

23. நதிதீரத்தில் காயத்ரீ ஜபம் பக்தியுடன் பண்ணுவது சரிதான். ஆனால், வைதீகர்களின் கண்கள் எங் கேயோ போய்விடுகின்றன!

24. விருந்தாளிகள் வருவதில் நாம் மிகுதிப்படுத்தியிருந்த பணம் பறக்கிறது. அதற்குமேல் இன்னும் போஜனம் சித்தமாகவில்லையா என்று அவர்கள் பறக்கிறார்கள் !

25. உத்ஸவம் நெருங்குகையில் கோயில்களும், கவர்னர் வரவின் போது ரோடுகளும், விசேஷ விரத நாட்கள் வருகையில் நமது வீடும் சுத்திகரிக்கப் படுகின்றன.

26. புதிய சேர்மன் வருவதற்கு முன் பெருத்த தீவட்டி வெளிச்ச

---

நூறு ரூபா சம்பளம் பெறுபவன் வெறுமனே உட்கார்ந்திருப்பதுபோல் தோன்றினும், அவன் மனம் ஓய்வின்றி ஸதா வேலைசெய்தபடியே யிருக்கும். தன் வாக்கின் சக்தியைக்கொண்டு அனைவரையும் அடக்கியாண்டு மேலுக்கு வேண்டிய யோசனையும் சொல்லுவான். அதற்கு அவன் பெறுகிற சம்பளம் சரி,

மும், ஏதோ சாதித்துவிடப்போவது போன்ற தடபுடலுமா யிருக்கிறது. அவர் சேர்மனை பிறகோ பழய சேர்மனே வெகு நல்லவராக எண்ணும்படி செய்துவிடுகிறார்!

27. நம்மை அதிகமாகத் தொந்தரை செய்யாத கடைக்காரனின் பாக்கியைக் கொடுப்பதில்லை. அவனுக்குத் தாக் கையில் பணம் கிடைப்பதில்லை. மடியைப் பிடித்து இழுக்கும் வியாபாரியிடமோ நாணயமாக நடக்கிறோம், அவனுக்குக் கொடுக்கப் பணமும் கிடைத்துவிடுகிறது!

28. அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் அவர்களுடைய அவசாத்திற்கு நம்மிடம் சாமான் வாங்கிப்போகிறார்கள். பிறகு அவர்கள் கொண்டுவந்து தருவதில்லை. அது அவர்களுடைய "அவசர வேலை"யுமல்ல. பிறகு நாமே நமது "அவசாத்திற்காக" அவர்களிடம் போய் வாங்கிவரவேண்டி யிருக்கிறது. நாம் மறந்துவிடினே அது அவர்களின் சொந்த சொத்தே!

29. ஒரே ஊரில் பிரசுரமாகும் இரண்டு தினசரிகளில் ஒன்று ஒரு விஷயத்தை உண்டு என்கிறது. மற்றொன்று அவ்விதம் நடைபெறவில்லையென்கிறது. பத்திரிகைகளின் அபிப்பிராயத்தைச் சில சமயங்களில் அப்பத்திரிகைகளின் தனித்த ஆசிரியரான ஒரு ஒண்டி மனிதரின் சொந்த அபிப்பிராயமாகவும் நினைக்க வைத்துவிடுகிறது. அதைப்பொதுஜன அபிப்பிராயமாகக் கொள்ள முடியவில்லை.

கே. விஜயராகவன்.

## கணவனின் நோந்த விடை.

ஒருவன் தன் மனைவியிடம் நமது குமாரன் ஏழையல்ல, அவனுக்கு நாலாயிரம் ரூபாய்க்கு சொத்துண்டு என, அதற்கு அவன் மனைவி இந்தக் குழந்தைக்கு—அந்தக் குழந்தைக்கு—எனக்கு எவ்வளவு சொத்து வைக்கிறீரென, அதற்குக் கணவன் இப்போதே நான் செத்துவிட்டதாக நினைத்துக் கேட்கிறாயா?—எனக்கு பாடைகூடச் சரியாகக் கட்டமாட்டீர்கள், இரண்டு மூங்கிலை வைத்துக் கட்டித் தூக்கிக் கொண்டுபோய் எறிந்துவிடுவீர்கள் என்று மனம்வெறுத் கூற, அவள் கேட்ட உள்ளக்கருத்தையே அவன் எடுத்துச் சொல்லிவிட்டதில் அவளும் வாயடங்கிமௌனமாகிறாள். கணவன் போகிறானே என்று எண்ணாமல் தனக்கு வரும் சொத்து எவ்வளவு என்று கணக்கிடுகிற பெண்களும் இருக்கிறார்கள்!

சும்மா உட்கார்ந்தபடி நூறு ரூபா சம்பளம் வாங்குகிறானென்று சொல்லாதீர்கள். அந்த உயர்ந்த சம்பளம் பெற அவன் எவ்வளவோ செலவிட்டு உழைத்துத்தன் அறிவை உயர்த்திக் கூர்மைப் படுத்திக்கொண்டிருக்கலாம். அந்த அறிவின் நுட்பம் பழிக்கிற பொறாமைக்காரர்களுக்கு இருக்கிறதா?

# சூரியமண்டலத்தின் அற்புதங்கள்.



சூரியனால் நமக்கு உண்டாகிற நன்மைகளுக்கு அளவில்லை. அது நன்ருய்ப் பிரகாசிக்கையில் அதை வெறுங் கண்ணால் பார்ப்பதற்குக் கூடவில்லை; மந்தாரப்பொழுதா யிருக்கும்போது மட்டும் ஒருவாறு காணலாம். கறுப்பு வர்ணம் பூசிய கண்ணுடியினால் அதைப் பார்த்தால் அது ஆகாயத்தில் சுடரொளி விட்டுப் பிரகாசிக்கிற கோளமென்று புலப்படும். அது பூமிக்கு என்றைக்கும் ஒரேதூரத்தில் இராமல், சிறிது காலத்தில் சற்று நெருங்கியும், சிறிது காலத்தில் கொஞ்சம் விலகியுமிருக்கும்; ஜூலை மாதத்தில் பூமிக்கு சமீபத்திலும், டிசம்பர் மாதத்தில் கொஞ்சம் தூரத்திலுமிருக்கும். சூரியன் பூமிக்குத் தொலை தூரத்திலிருப்பதால், அது நமது கண்ணுக்கு அத்தனை சிறிதாகத் தோற்றுகிறது. அது பூமிக்கு அதிக தூரமாயுள்ள காலத்தில் 92,963,000-மைல் தூரத்திலும், அதிக சமீபத்தில் இருக்கிற காலத்தில் 89,897,000-மைல் தூரத்திலும் இருக்கிற தாகையால், அது சராசரி பூமிக்கு 91,430,000-மைல் தூரத்திலுள்ளது. சூரியனை ஒரு முனையிலிருந்து மறுமுனை வரைக்கும் நேரே மைல்அளவாக அளந்தால் அதன்விட்டம் சுமார் 852,900-மைல் நீளமிருக்கும். பூமியின் விட்டம் 79,265-மைல் தூரமாதலால், சூரியன் விட்ட அளவானது பூமியின் விட்ட அளவுக்கு 107-மடங்குச்சற்று அதிகம். செக்கண்டு ஒன்றுக்கு 400-கெஜம் செல்லத்தக்க பீரங்கிக் குண்டொன்றிருந்து, அது பூமியிலிருந்து ஒரே கதியாய்ச் சூரியனை நோக்கிச் செல்லுகிறதா யிருந்தால், அக்குண்டு அதனிடம் போய்ச்சேரப் பதின்மூன்று வருஷகாலம் செல்லுமென்று 'ஹெர்ஸல்' என்னும் சோதிட வித்வான் சொல்லியிருக்கிறுர்.

***

தூரதிருஷ்டி யந்திரம் செய்யத் தலைப்பட்டது முதற்கொண்டு சூரிய மண்டலத்தை நுட்பமாய் ஆராய்ந்து பார்த்துக் கொண்டே வருகிறுர்கள். அதன் மேற்பரப்பை நன்ருய்ச் சோதித்துப் பார்த்ததில், எங்கும் ஒரே விதமாய் வெட்ட வெளிச் சமாயிராமல் கன்னங் கரேலென்று கருத்த பல புள்ளிகள் காணப்படுகின்றன. அக்கரும் புள்ளிகள் எப்பொழுதும் ஒரேவிதமா யில்வாமல் அப்போதைக் கப்போது மாறுகின்றன. சில காலங்களில் இப்புள்ளிகளே யில்லாமல் நிர்மலமாய் இருப்பதுமுண்டு. கறையிருள் போன்ற அப்புள்ளிகளைத் தூரதிருஷ்டியந்திரத்தினால் பிரதிதினமும் கருத்தாய்ப் பார்த்தறிந்த வித்துவான்கள் அவைகள் கிழக்கேயிருந்து மேற்கு நோக்கி

---

எத்தனை குடும்பங்கள் தலை சாய்ந்தன? எத்தனையோ கௌரவப் பிரதாப மனிதர்கள் எவ்வெவ்வாருயினர்? எதனை அற்பர்களின் பெயர் இப்பொழுது கொடிகட்டிப் பறக்கிறது? எத்தனை ஏழைகள் சீமான்களாகி விட்டனர். வாழ்வு ஒரு நிலையிலிருக்கவில்லை. ஆனதால் துள்ளிப் போகவேண்டாம்,

மந்த கதியாகப் பதினுன்கு நாள்களுக்குள் செல்லுகின்றன வென்று கண்டறிந்திருக்கிருர்கள். அவைகள் பதினைந்தாவது தினத்தில் மீண்டும் கிழக்கே காணப்படுகின்றன. ஆனுல், முன்போலிராமல் சற்று மாறுபட்டிருக்கும். அப்புள்ளிகள் இவ்வாறு ஒழுங்காய்ச் சரிப்பதினுல், சூரியனும் பூமியைப்போலத் தன் இருசைச் சுற்றி வருகிறதென்று அறிந்து கொள்ளலாம். அப்படிச் சூரியன் தன்னைத் தானே ஒருதாஞ் சுற்றிவர நமது நாளின் கணக்குப்படி சுமார் 26-நாள் செல்லுகிறது. சூரியனிடத்திலுள்ள கரும்புள்ளிக ளெல்லாம் ஆழ்ந்த பள்ளத்தாக்குகளா யிருக்கலா மென்று சிலர் ஊகிக்கிருர்கள். அவற்றின் பரப்புமட்டும் லக்ஷக்கனக்கான சதுரமைலுக்கு மேற்பட்டிருக்க வேண்டு மென்றும் உத்தேசிக்கிருர்கள். சூரிய கிரகணம் உண்டாகிற காலங்களில் சிறந்த தூரதிருஷ்டி யந்திரங்களைக் கொண்டு சூரியமண்டலத்தைப் பார்த்தால், அதைச் சுற்றிலும் அக்கினிமயமான பொன் மேகங்களெழுந்து சுடர் விட்டெரிவது போலச் சற்று மேடும் பள்ள முள்ளதாக இருக்கக் காணலாம்.

***

சூரியனுடைய கிரணங்களிலுள்ள பதார்த்தங்களைப் பகுத்தறிவதனுல், பிராணவாயு, உப்பு வாயு, காந்தம் முதலிய பலபொருள்களால் சூரியமண்டலம் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறதென்று சிலர் உத்தேசிப்பதுமுண்டு. சூரியமண்டலத்திலிருந்து அபரிமிதமான வெளிச்சமும் உஷ்ணமும் இடைவிடாமல் அதைச் சுற்றி எங்கும் சென்றுகொண்டே யிருக்கிறது. நாம் வசிக்கிற இந்தப் பூமியானது சூரியனிலும் இருநூறுகோடியில் ஒரு பங்குக்குஞ் சற்றுத் தாழ்வாகவே ஒளி மழுங்கி உஷ்ணம் குறைந்து போகிறது. சூரியனிடத்திலுள்ள வெளிச்சமும், உஷ்ணமும் இருநூறு கோடி மடங்கு குறையாமல் அப்படியே பூமிக்கு வருமாயின் பூமி தாங்கமாட்டாது. இந்த வெளிச்சத்துக்கும் உஷ்ணத்துக்கும் ஏற்றவண்ணமாகவே இவ்வுலகத்திலுள்ள படைப்புகள் பலவும் படைக்கப் பட்டிருக்கின்றன. இவ்வாருகச் சூரியனுக்கு பூமி முதலிய கிரகங்களுக்குவெளிச்சத்தையும் உஷ்ணத்தையும் கொடுக்கும் திறமிருப்பதுமன்றி அவற்றை யெல்லாம் விழவொட்டாமல் இருக்கும்படிக்குச் செய்கிற ஆகர்ஷண சக்தியும் அதற்குண்டு. ஒரு இரும்புத்துண்டைக் காந்தத்திற்கு எதிரே பிடித்தால், அவற்றிற் கிடையில் கண்ணுக்குப் புலப்படத்தக்க தடை யொன்றும் இல்லை யென்ருலும், அவ்விரும்புத் துண்டை காந்தம் எவ்வாறு இழுத்துக்கொள்ளுகிறதோ அவ்வண்ணமே பூமியை இழுத்துக்கொள்ளுகிற காந்தக் கவர்ச்சி சூரியனுக்கு உண்டு. இரும்புத் துண்டு காந்தத்திற்குச் செல்லுகிற கவர்ச்சிக்கு "காந்தக் கவர்ச்சி" யென்றும், காந்தமில்லாத பட்சத்தில் அவ்விரும்புத் துண்டு பூமியை நோக்கி கீழே செல்லுகிற கவர்ச்சிக்கு "இழுப்புக் கவர்ச்சி" யென்றும் பெயர். வடதென் துருவங்களை விடப் பூமத்தியில் "இழுப்

---

சொத்தும் ஆஸ்தியும் சேர்வது சேரக்கூடிய காலம் வந்தால் எப்படியோ சேர்ந்துவிடுகிறது. அந்தக் காலம் வாரதவரையில் எவ்வளவுதான் சேர்க்க முயன்ருலும் கூடாமல் கைக்குவந்த பணத்திற்கெல்லாம் ஒவ்வொரு புதிய சிலவு ஏற்பட்டுக்கொண்டு பணப்பைமுழுதும் கரைந்து சின்னுபின்னமாகிறது.

புக் கவர்ச்சி'' அதிகம். இழுப்புக் கவர்ச்சி யில்லாத இடமொன்றிருந்து, அங்கே அப்பொருளைக் கொண்டுபோய் நிறுத்துப் பார்த்தால் எடையும் இராது. பொருளும் அப்படியே தான் இருக்கும். ஆனால் இழுப்புக் கவர்ச்சி யில்லாதது இல்லை.

***

இழுப்புக் கவர்ச்சி பூமிக்கு மட்டுமல்ல; வஸ்துக்கள் எல்லாவற்றிற்கும் அவ்வவற்றின் பெருமை சிறுமைக்கேற்றபடி யுண்டாதலால் பெரிதானவை சிறிதானவற்றை ஆகர்ஷிப்பது இயற்கையே. கிரகங்கள் எல்லாவற்றையும்விடச் சூரியன் மிகப்பெரிது. இந்நாளளவும் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிற கிரகங்கள் 182. இவற்றுள் புதன், சுக்கிரன், பூமி, அங்காரகன், வியாழன், சனி, நெப்தூன், ஹெர்டில் முதலியவை பிரதானமானவை. கிரகங்களெல்லாம் ககன மார்க்கமாய்ச் சூரியனைச்சுற்றி ஓடிக்கொண்டே வருகின்றன. சூரியனுக்கும் பூமிக்கும் இடையிலுள்ள பிரதான கிரகங்கள் புதன், சுக்கிரன் இவை இரண்டுமே. மற்றவைகள் பூமிக்கு அப்பாலுள்ளவை. புதன், சுக்கிரன் இவ்விரண்டு கிரகங்களிலும் சூரிய வெளிச்சமும் உஷ்ணமும் வெகு அதிகமாயிருக்கும். நமது பூமிக்கு அப்பாலுள்ள கிரகங்களில் சூரிய வொளியும் வெப்பமும் பூமியிலுள்ளதை விட அநேகமடங்கு மட்டுப் பட்டிருக்கும். நமது நாட் கணக்கின்படி, புதன் 88-நாளிலும், சுக்கிரன் 225-நாளிலும், பூமி 365¼ நாளிலும், செவ்வாய் 687-நாளிலும், வியாழன் 4,332-நாளிலும், சனி 10,759-நாளிலும், நெப்தூன் 60,127-நாளிலும் சூரியனைச் சுற்றிவரும். கிரகங்களெல்லாம் பெரும்பான்மையாய் மேற்கேயிருந்து கிழக்காக ஓடுகின்றன. ஒளியும் உஷ்ணமுமே உயிர் வாழ்க்கைக்கு ஆதாரமென்பது யாவருக்குந் தெரிந்த விஷயமே. சூரியனிடத்திலிருந்து ஒளியும் உஷ்ணமும் வாராமற் போனால் பூமியில் ஒன்றுமே பிழைத்திராது. இனி, அடுத்த ஸஞ்சிகையில் சந்திர மண்டலத்தைப் பற்றி ஆராய்வோம்.

---



நான் ஆசைவைத்த நண்பன் என்னை அவ்வளவாய்ச் சிநேகிக்காது போக, என் மனமெல்லாம் அவனிடமே செல்ல, நான் ஆசைப்படாத மற்றவர்கள் என்னை நாடிவர, அவர்களிடம் என் மனம்செல்லவில்லை. ஆசைப்பட்டது அழுகியும், தூரத்திலும், விலகியும் போய்விடுகிறது. ஆசைப்படாததோ பக்கத்திலேயே இருக்கிறது. இதற்குப் பதிலாக ஆசைப்பட்டது இருக்கக்கூடாதா? விரும்புவது கிடைப்பதில்லை!

---

நாற்பது வருஷத்திற்கு முன்பு பார்த்த அந்த மிட்டாய்த் தட்டுக்காரன் நாளைக்கும் மிட்டாய் விற்கும் தட்டைத் தலையில் வைத்திருக்கிறான். அவன் தலையெழுத்தில் அந்தத் தட்டு அவனைவிட்டுப் போகாதபடி சேர்த்திருக்கிறது போலும்! அந்தத் தட்டை அவன் உதறி எறிந்துவிடுவானாகில் அப்போது அவன் தன் தலைவிதியை மதியால் வென்றவனாவான். அது தான் இல்லை!

# மூளைக்கு வேலை.

## I

### விடுகதை வினா ?

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| 9 | 10 | 11 | 12 |
| 13 | 14 | 15 | 16 |

1-2-3-4-சக்தியின் ஓர் திருநாமமாகும்.
1-5-9-13-ம் அதே பெயராகும்.
5-6-7-8-மும்மூர்த்திகளில் ஒருவரின் ஓர் திருநாமமாகும்.
2-6-10-14-ம் அதே பெயராகும்.
9-10-11-12-ஸ்ரீ மஹா விஷ்ணுவின் அவதாரங்களில் ஒருவரின் ஓர் உயர் திருநாமமாகும்.
3-7-11-15-ம் அதே பெயராகும்.
13-14-15-16-ம் ஒளியைக் கொடுக்கும் ஓர் பூச்சியாகும்.
4-8-12-16-ம் அதே பெயராகும். இதற்கு விடை கூறுக.

(2) ஓரெழுத்திலோர் பதம் உயர் திருமகளேயாகும். ஓங்கிவளர் மாமுமாகும். உன்னதப் புரவியாகும். இனிய தின்பண்டம் செய்ய ஏற்றதொரு பொருளுமாகும். விடை நவில்க.

மாந்தை-சா. கிருஷ்ணய்யர்.

## II

### விடுகதை வினா ?

விதிவசத்தால் புகைரதத்தில் உயிர் துறந்த ரதிபோன்ற உருவமைந்த மெல்லியலாள் திருநாமத்தின் முதலிரண்டெழுத்துடனே—தமிழுலகில் அருங் குழவியெனப் பொன்னே போல் அறிவுடையார் போற்றும் சஞ்சிகையினது மூலகர்த்தா பெயரின் கடைசி யிரண்டெழுத்தைச் சேர்ப்பாயாகில், முஸ்லீமால் கொலையுண்டவோர் தேசாபிமானியின் பெயரேயாகும்.

மு. நா. தெண்டாயுதபாணி பிள்ளை. (கோலாலம்பூர்.)

## III

### விடுகதை வினா ?

(1) ஆறெழுத்திலோர் பெயர்.

1-2-3-6-ம் எழுத்துச் சேரில் 12-ராசிகளில் ஒன்றைக் குறிக்கும்.

4-5-6-ம் எழுத்துச் சேரில் வளைவைக் குறிக்கும்.

---

குழந்தைகளின் களங்கமற்ற விளையாட்டிற்கு முன்பாக நமது சென்று போன இளமைக் காலத்தின் ஞாபகங்கள் அடுக்கடுக்காகக் கிளம்புகின்றன.

1-5-6-ம் எழுத்துச் சேரில் சௌக்கியத்தைக் குறிக்கும்.

6-எழுத்தும் ஒன்று சேரில் தமிழ் நாட்டு புண்ணிய க்ஷேத்திரத்தின் பெயராகும்.

(2) நான்கெழுத்திலோர் பெயர்.

1-2-ம் எழுத்துச் சேரில் துப்பாக்கி அதிர்ச்சியின் பின் வருவதைக் குறிக்கும்.

3-4-ம் எழுத்துச் சேரில் புசிப்புக்கு வேண்டிய ஒரு முக்கிய வஸ்துவைக் குறிக்கும்.

1-4-ம் எழுத்துச்சேரில் ஆதிதிராவிட வகுப்பினரைக் குறிக்கும்.

2-4-ம் எழுத்துச்சேரில் பரமனின் இருப்பிடத்தைக் குறிக்கும்.

4-எழுத்தும் ஒன்றுசேரில் பொக்கிஷம்போல் பத்திரப்படுத்தி வெகு செட்டாகச் செலவிடுவதும், ஒரு உணவுபோல் தேவைப்படுவதும், பண்டித பாமர ரஞ்சிதமாய் விளங்குவதுமான லோகவியாப்தமாயுள்ள ஒரு மஹா அவசிய வஸ்துவைக் குறிக்கும்.

வ. சு. நாராயணசாமி செட்டியார்.

## IV

## விடுகதை வினா ?

ஏழ எழுத்துக்களாலான ஓர் ஊரின் பெயர். 1-6-5-7-சேர்ந்தால் ஒரு தேசம். 1-4-5-7-சேரின் தாமதம். 3-6-7-கூடின் இசை. (பண்) 1-2-சேர்ந்தால் தேன். 1-2-3-சேர்ப்பின் நகரம். 6-4-5-7-சேர்க்க வாசனை. 1-6-7-சேர்க்க நக்ஷத்திரமாகும்.

C. D. S. Gobi.

[நமக்குக் கிடைத்திருக்கும் விடுகதைகளெல்லாம்—"1-2-3-எழுத்துச் சேரில்" என்பதானவைகளாகவே யுள்ளன. ஆதலின் அவை அடுத்த ஸஞ்சிகையில் வரும். விடுகதை வரைவோர் சிறுவர் சிறுமியருக்குப் பயன் படும் வண்ணமாக இயற்கையின் அழகை விளக்கிப் பாச்சுவை பரவிய நடையில் சுருக்கி அமைக்கவேண்டும். உதாரணத்திற்காக நாம் இயற்றிய "ஆநந்த கதா கல்பகம்" நான்காவது வால்யத்தினின்றும் எடுத்து எட்டு விடுகதைகளை அடியில் குறிப்பிட்டுள்ளோம். அவ்வித அமைப்பிலும் இனி அனுப்புமாறு அன்பர்களை வேண்டுகிறோம். தெரிவித்த ஒரு விஷயத்தை வைத்துக் கொண்டு யோசித்து விடை கூறத்தக்கதாய் விடுகதைகளை அமைக்கவேண்டும். விடுகதை வரையும் நேயர்கள் அனைவருமே "1-2-3-எழுத்துச் சேரில்"— என்று ஆரம்பித்துக்கொண்டால் அது வாசிப்பதற்கு ருசிக்கமாட்டா. விடுகதையைப்படிக்கும்பொழுதே தித்திக்கும் வண்ணம் இருக்கவேண்டும். ப-ர்.]

---

ஒருவனுக்கு அருமையாய்ப்படுகிற ஒன்றை மற்றவனும் அருமையாகப் பாவிக்க முயல்வானாகில், இருவரும் மனமொத்த அன்பினராய் மாசற்ற மாணிக்கங்களாய் விளங்குவர். ஒரே குழந்தையிடத்துத் தாயும் தந்தையும் கொள்ளுகிற அருமையும் அன்பும் அவர்களை ஒன்றுபடுத்தி விடுகிறது.

# V

## விடுகதைகள். (மாதிரிக்காக)

1. காலில்லை, கையில்லை, கண்கள் உண்டு, வாயுண்டு, சிறகுண்டு, வலு வான ஓட்டமுண்டு, வானத்திலும் பறவாது, பூமியினில் நடமாடாது. வகை யாக உரைத்திடுவீர் வண்மைகண்டே.

2. வாலுண்டு, தோலுண்டு, மிருகமல்ல, வயிற்றிலே நீருண்டு-குடலோ யில்லை, தலையுண்டு, கண்ணில்லை காலுமில்லை, தரிக்காது சிரணிக்குஞ் சக்தி யுண்டு, தலைவாலும் கட்டுண்டு தொங்குமிவர் ஆரென்று சாற்றுவீரே.

3. காலாறு, கையிரண்டு, கண்ணோ நாலு, தலையிரண்டு, உடலிரண்டு, வாலோ ஒன்று, ஓடுவது நாலுகால்! உதைப்பது இரண்டு கால். உண்மையிது கண்டுரைப்பீர் உலகத்தோரே.

4. கணுவுள்ளான், வளைந்தவனு நீண்டு நின்று, கலையுடுத்து பூ முடித்து குச்சு கட்டி, கயறதினால் கட்டுண்டுக் ககனந்தன்னில், கரணங்கள் போடுகின் றான் கண்டுசொல்லே.

5. முத்துக்கள் பதிந்திருக்கும், முன் குடுமி சிவந்திருக்கும், சுத்த பச்சையாடை சூழ்ந்திருக்கு நாற்புறமும், மெத்த அழகாயிருக்கும், மின்னலது போலொளிக்கும், வித்து இது ; வாழை மலர் வடிவான வண்மை தானே.

6. வயிறுபெருத்த சிறுமடந்தை, வாய் சிறிது, உதடில்லை, பல்லில்லை, உட்கொள்வாள், வெளிவாாது உட்சென்றதெல்லாம். ஓகோ இவள் வேண் டும் யாருக்குமே, சிக்கனத்தில் தலைமைதானே.

7. நாலுகால் முதுகுயர்ந்தோன், நடமாடிடுவான் தனியாக. எவரேனும் வரக்கண்டால் ஒன்றுமில்லா கல்லேயாகும், நன்மையிதைக் கண்டுரைப்பீர்.

8. சித்திர பின்னல் கோட்டைக்குள் போக வழியுண்டு ; திரும்ப வழி யில்லை. அது என்ன ?

**விடுவிப்பு:—**1. மீன். 2. கபலைச்சால். 3. குதிரைமேலேறி சவாரி செய்பவன். 4. காற்றாடி அல்லது பட்டம். 5. மக்காச்சோளம். 6. உண் டிப் பெட்டி. 7. ஆமை. 8. இரும்பு எலி போன்.

(ஆநந்த கதாகல்பகம் 4-ம் வால்யம்)

["ஆநந்த கதா கல்பகம்" 4-வது வேண்டுவோர் ஸ்ரீரங்கத்தில் பத்திரா சிரியருக்கு நேராக எழுதிப் பெற்றுக்கொள்ளலாம். விலை ரூபா 3. வேறெங் கும் அகப்படா. இந்த மாதிரியாகவும் விடுகதைகள் அமைக்கவேண்டும். ஒவ்வொன்றும் வெவ்வேறு மாதிரியாக இருந்தால்தான் சுவைக்கும். ப-ர்.]

---

பி. ஏ. வரை வாசித்தும் எங்கும் சரியான வேலை கிடைக்காமல் எம். ஏ. க்கு வாசித்தாலாவது வேலை கிடைக்காதா என்று சிலர் மறுபடியும் படிக்கத் தொடங்குகிறார்கள். படிப்பு மட்டும் போதாது ; அதிர்ஷ்டமும், லௌகிக சாமர்த்தியமும், கால அநுகூலமும் இருந்தால்தான் பிழைக்கலாம்.

## VI

**புரட்டாசி மாத ஸஞ்சிகையிலுள்ள விடுகதை வினுவுக்கு விடை:—**

I தொடரெழுத்து வினு ?:—(1) காமசாஸ்திரம். (2) மார்க்கண்டன். (3) மார்த்தண்டன். (4) அகத்திமரம். (5) கட்குடி கேடர். (6) தத்தாத்ரேயர். (7) கார்க்கோடகன். [பரிசுக்கு உரியவர் ஸ்ரீமான் M. S. கிருஷ்ணஐயர்.— ப-ர்.]

II விடுகதை வினு ?—(1) மதராஸ், கல்கத்தா. (2) மகன்.

III விடுகதை வினு ?—(1) கூடப்பிறந்தவர்கள். (2) தாவரம். (3) மொத்தப்படிகள்-59. (4) முதலில் ஒரே சுமையிலிருந்து ஒவ்வொரு சுங்கக் கேட்டுக்கும் இரண்டு காய் வீதம் கொடுத்து வருகிறார்கள். இருபத்தைந்தாவது கேட்டில் ஒருவனுடைய சுமை காலியாய்விடுகிறது. பின்னர் மீதியிருக்கும் ஒரு சுமைக்கு ஒவ்வொரு கேட்டுக்கும் ஒரு காய் வீதம் கொடுத்து வர, 25-காய்கள் மிஞ்சுகின்றன. அந்த 25-காய்களையும் விற்றுப் பங்கிட்டுக் கொள்கிறார்கள். [இது ஏராளமாகச் சம்பாதித்தும் 100-க்கு 99-பாகம் குடும்பச் செலவுக்கே சரியாகி ஒரு மிச்சம் சேர்த்துவைப்பதற்குக் கூடாமலே போய்விடுகிற, அல்லது சேர்த்த தொகையும் வெகு சொற்பமாய் இருக்கிற—பேர் பெரிதாயுள்ள ஒரு கௌரவ மனிதரின் ஸம்பாத்திய ஜீவியத்தைக் குறிப்பிடுவதாகவும் கொள்ளலாம். ப-ர்.]

☞ விடுகதை வினுக்கள் வரைவோர் அத்துடன் தந்துள்ள விடைகள் மறு ஸஞ்சிகையில் பிரசுரமாகி விடுகின்றன. ஆதலின் தனியாக எவரும் விடுவிப்பு அனுப்பவேண்டாம். அவற்றைப் பிரசுரிக்கப் பத்திரிகையில் இடம்போதாது. ப-ர்.]

### எதையும் நோட்டுப் புஸ்தகத்தில் எழுது

எதையும் நன்றாகத் தைத்த நோட்டுப் புஸ்தகத்தில் எழுதிப் பத்திரப்படுத்தி வை. ஏனெனில் நாவலாசிரியர் ஒருவர் இரண்டு வருடங்கட்கு முன்பு தனித்தனிக் காகிதத்தில் எழுதிவைத்துச் சேர்த்த நாவலொன்றைத் திருத்திப் பிரசுரிக்க எண்ணி அதை எடுத்துப்பார்க்க நான்கு காகிதங்கள் காணவில்லையாம். அதனால் மறுபடியும் கஷ்டத்துடன் யோசித்து அவைகளைப் பூர்த்தி செய்யவேண்டிய தாயிற்றாம்.

V. சிவசுப்பிரமணியன்.

வினு:—" தங்கள் ஆபீஸ் எங்கே இருக்கிறது ?" விடை:—" எல்லாம் பொடிடப்பிக்குள் இருக்கிறது."

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# மாமிகளின் மகா நாடு!



போட்டார்களப்பா! பெரிய கூட்டம்! கூட்டமென்றாலும் கூட்டமா! கனத்த கூட்டம்!! மாமிகள் என்றால் என்ன சாமான்யமா? அவர்கள் மகா நிர்வாகக்காரர்களாச்சுதே! மெத்த மெத்த அநுபோகஸ்தர்களாச்சுதே! பலகாலங்கள் கண்ட மகா முன்யோசனைக்காரர்களாச்சுதே! வீட்டையும் அந்தந்தக் குடும்பங்களையும் ஆளுகிற சக்கரவர்த்தினிகளாச்சுதே! ஆகவே, மகாசமர்த்து நிறைந்த நற்குண மாமிகளும், பொக்கைவாய் மாமிகளும், பொறாமை பிடித்த மாமிகளும், ஆணவம் தடித்த மாமிகளும், அடத்தைச் சாதிக்கிற மாமிகளும், இரக்கமற்ற மாமிகளும், கொடூரமே உருவான மாமிகளும், சித்திரவதை செய்கிற மாமிகளும், ஒரு பகையை உள்ளே வைத்து அதைக் காலமுழுதும் சாதிக்கிற மாமிகளும், தொட்டுக்கொண்ட ஒரு குறையை என்றைக்கும் சொல்லிக் காட்டுகிற மாமிகளும், இன்னொருத்தியைக் கொண்டுவந்து வைத்தாவது முன்னே இருக்கிறவளை அடக்க வேண்டுமென்று நினைக்கிற மாமிகளும், எவ்வளவு உழைத்தாலும் தாய் வீட்டிலிருந்து கொண்டுவந்து போட்டாலும் விஸ்வாசமற்றிருக்கிற மாமிகளும், "நீ அவர்கள் பக்கத்து மனுஷனாகிவிட்டாய்" என்று பெற்ற மகனைப் பிடிங்கித் தின்னும் மாமிகளும், என்றைக்கும் முறைத்து நிற்கிற மாமிகளும், மருமகளுக்கு சாந்தி முகூர்த்தமே செய்யாத மாமிகளும், வருவார் போவாரிடத்திலெல்லாம் வீட்டின் மானத்தை வெளியிலிழுத்துப் பேசுகிற மாமிகளும், தக்க கௌரவஸ்தர்கள் தன் குமாரனைத் தேடிவந்தால், அவர்களிடம் தன் மகனைப் பற்றிக் கண்டது சொல்லிக் கேவலப்படுத்துகிற மாமிகளும், இன்னும் இந்த விகடன் சொல்லி மாளாத ஆயிரம் விதங்களில் அக்கிரமங்களும் ஹிம்ஸைகளும் நடாத்திச் செங்கோ

---

கடன்களை உடனுக்குடன் கொடுத்துத் தீர்த்துவிட்டுப் பளுவு தீர்ந்த தென்பலனுக்குக் கையில் பணமில்லாவிடினும் கடன் தர எந்தக் கடைக்காரனும் தயார். ஆனால், சாமானாக இல்லாமல் ரொக்கமாய் ரூபாயாகக் கடன் பெறுவது சற்று கஷ்டமே. அதில் கடைக்காரனுக்கு லாபமில்லையன்றோ?

லோச்சுகிற மாமிகளுமாகத் தொங்கிப் போன முகத்தோடும் தோரணம் போட்டுத் தொட்டுக்கொண்டார்க ளப்பா தங்களின் தொனதொனப்புப் பிரஸங்கத்தை !

***

பெரிய மாமி :—இதென்னடி யம்மா ! அவதியிலும் அவதி !! அந்தப் பாழாய்ப்போன சாரதா மசோதா அளவிற்கு அதிகமான ஓட்டுகளால் நிறைவேறிப் போச்சுதாமே! ஒரு எழுத்தைக்கூட ஒரு "கமா"வைக் கூட மாற்றுமல் திருத்தாமல் அப்ப டியே சரிசரியென்று முடித்துவிட் டார்களாமே ! இந்த மசோதாவுக்கு சாதகமாக 67 - பேர்கள் நிற்க, அதற்கு எதிரிடையாக 14-பேர்தான் ஓட்டுகொடுத்தார்களாமே!இதென்ன கொள்ளேயடி யம்மா! இந்தக் கல்யாண மசோதா நிறைவேறின நாள் (23-9-1929) இந்தியாவின் சரித்திரத்திலே ஒரு முக்கிய தினமாகப் பாராட்டப் படும் என்கிற சிலாகிப்புப் பேச்சுக ளும் வேறேயாம் ! வைதீகக் கொடு மையினுல் வகுப்பு கீழே சென்று கொண்டிருப்பதிலிருந்து ஸமூகத்தை மீட்டு சுயேச்சைபெற்ற தினமாகக் கொண்டாடவேண்டுமென்று கை கொட்டி ஆர்ப்பரித்தார்களாமே ! இப்படியும் ஒரு அக்கிரமமுண்டா ? வேதங்களால் வாழ்த்தப்பட்ட நமது நாட்டை வெள்ளேக்காரநாடாக மாற் றப் பார்க்கிருர்களே ! ஐயோ ! தெய் வமே! குடி கெட்டுப்போச்சே ! வீடு கெட்டுப்போச்சே ! வைதீகம்—வா தக்ஷணே—விட்டுப்போச்சே ! நாலு பேர் சொல்லிக்காட்டிப் பழிக்க லாச்சே ! எங்களின் மாமி அதிகாரம் ஒடுங்கும் காலமாச்சே ! என்ன செய் வதென்று தெரியவில்லேயே ஈசா !

***

சின்ன மாமி :—கல்யாணம் 14-வயதுக்கு முன்னும், ருதுசாந்தி 16-வயதுக்கு முன்னும் செய்யக்கூடா தென்று சட்டம் செய்தது குடும்பத் தையே சின்னுபின்னப்படுத்துவதாகு மே. 14-வயதுக்கு மேற்பட்ட பெண் ணும், 16-வயதில் சாந்தியாகிறபெண் ணும் பையனுக்குத் தலேயணே மந்தி ரம் போட்டு வேறு தனிக்குடித்தன மாக்கிவிடுவார்கள். பையனுக்கோ அவள் பேச்சே கருடகம்பம் ! வேறு குடித்தனமாகி அப்பனேயும் ஆத்தா ளேயும் எட்டி உதைப்பான். வரு கிற சிறுக்கியின் தாய்வீட்டுக் கூட் டம்தான் வீடு நிறையும். கணவனேச் சேர்ந்தவர்களேச் சேர்க்கமாட்டாள். மருமகள் வருகிறவரை ஒன்றுக இருந்த குடும்பம் மருகி வந்ததும் பிரிந்துவிடும். அவளும் விலகி அந் நிய மனுஷிபோலாவாள். சிறு வய தில் கலியாணமானுல் பெரியவர்க ளுக்கு அஞ்சி நடக்கத் தோன்றும். நான் 16-வயதில் மூன்று குழந்தைகள் பெற்றுவிட்டேனே ! தேய்ந்தா போனேன்? ஊல்போலிருக்கிறேனே! இனி "கல்யாண ஜெயில்" என ஒன்றும் ஏற்படுமாக்கும் !

***

குட்டை மாமி :—ஐயோ ! நமது ஹிந்து மதத்துக்கே ஆபத்து வந்து விட்டதடி யம்மா! நமது வருணுசிரம தர்மங்களுக்கே மோசம் வந்ததடி யம்மா ! பெண்களின் கற்புக்கே ஆபத்து நேர்ந்துவிட்டிருக்கே! 14-

---

ஏமாறும்போதுதான் ஒருவன் புதிய அநுபவத்தையும், நல்ல தெளிவை யும், பளிச்சென்று அந்த நிமிஷத்தில் தோற்றுகிற நூதன அறிவின் கூர்மையை யும் பெறுகிருன். இது ஏமாறியதற்குக் கிடைத்த லாபம் ! ஏமாருவிட்டால் இவற்றைப் பெற்றுக்கொள்ள முடியாது. ஏமாறியே தேரவேண்டும்,

வயதில் கலியாணமென்றால் ஒவ்வொருத்தியும் திரண்டு உருண்டு இறுமாந்து பெருத்துப்போய் நிற்பாளே! அவளைக் கண்டதும் தாலி கட்டியவன் மயங்கிப் போவானே! கலியாணப் பந்தலிலேயே சாந்தி முகூர்த்தச் சடங்கையும் நடத்திவிடும்படி அடம் பிடிப்பானே! கலியாணச் சீர்வரிசைகள் வேறே பெற்றுக்கொண்டு, அதற்காக வரதக்ஷணைப் பணம்வேறே வாங்கிக்கொண்டு, அப்பால் சாந்தி முகூர்த்தத்திற்கு இவ்வளவு தொகை, இவ்வளவு வெள்ளிப்பாத்திர சீர்வகைகள் கொடுத்தால்தான் நடத்துவோம், இல்லாவிட்டால் பையனுக்கு வேறொரு பெண்ணைப் பார்த்து இன்னொரு விவாகம் செய்துவிடுவோம் என்று முறுக்கு முறுக்கி அப்போதும் கை நிரம்பப் பெற்றுக்கொண்டு நடத்துகிற விமரிசைகளிலெல்லாம் மண் விழுந்து போச்சுதடி யம்மா! ஐயோ! என் அடிவயிறு எரிகிறதே! என்னவோ பெண் சின்னஞ் சிறு வயதாக இருந்தால் பையனும் அவளைப்பற்றிக் கவனிக்கமாட்டான்; அவள்மேல் ஒரு "கண்" போடவுமாட்டான்; நாம் சொல்லுகிறபடி நம் இஷ்டப்பிரகாரமெல்லாம் நடப்பான். குறித்த தொகை தராவிட்டால் சாந்தி முகூர்த்தத்துக்கு ஒப்பாதே யென்று மகனை நமது வசப்படுத்தி வைக்கலாம். ஐயோ! இப்போதோ, அவள் திரண்டு தயாராகி நிற்கிறாளே, அவளை இவன் விட்டுவிடுவானா? அவள் மோகத்திலே மயங்கிப்போவானே! சாந்திக்குப் பணம் கேளப்பா என்றால், சீச்சி! அது பெருத்த அநியாயம் என்று நமக்கே புத்தி சொல்லப் புறப்பட்டுவிடுவானே! அந்தச் சிறுக்கியின் தலையணை மந்திரம் அவனுக்கு நன்றாய் ஏறிப்போமே! பிறகு அவன் நம்மை எங்கே மதிக்கப் போகிறான்? எங்கே நமது வார்த்தையைக் கேட்டு அடங்கியிருக்கப் போகிறான்? ஆ! நமது வாழ்வுக்கெல்லாம் தாழ்வு வந்து விட்டதே! நேற்றுவந்தவள் அரசாள, வந்ததும் கட்டிலின்மேல் ஏற, நாம் ஒரு மூலையில் ஒடுங்கும் காலமாய்ப் போச்சே! இந்த மசோதாவை நிறைவேற்றியவர்கள் நாசமாய்ப் போகார்களா! இவர்கள் நன்றாயிருப்பார்களா! வைதீகர்களின் வயிற்றெரிச்சலும் சாபமும் வீணாய்ப்போகுமா?

***

நாட்டை மாமி:—இந்த மசோதாவைக் கொண்டுவந்தவனுக்கு நாசிம்ம ஸ்வாமியைச் செபித்து ஆயிரம் சாபங்கள் கொடுக்கப்போகிறேன். அவன் பேரே ஒருமுழ நீளம்! என்னவோ ராய்சாஹிபு பட்டமாம், ஹரிபிலாஸ சாரதாவாம்! நமக்கென்று எங்கிருந்து எமனாக முளைத்தானோ? வயது வந்த பிறகு கல்யாணம் செய்யுமாறுதான் வேதங்கள் கூறுகின்றன வென்றும், சென்னை மாகாண ஜனத்தொகையில் 100--க்கு 97 பேர் பிராமண ரல்லாதவர்களென்றும், அவர்களுக்குள் ருதுவான பிறகே கல்யாணங்கள் நடக்கிறதென்றும், பாக்கியுள்ள 100-க்கு 3 - பேர் ஆன பிராமணர்களிலும் கூடப் பலர் மசோதாவுக்குச் சாதகம்தானென்றும் அந்த சாரதா பேசினாராமே! ஸ்திரீகளை அடிமைகளாக வைத்திருக்கவும், 'வழக்கம்' என்று சொல்லி அவர்களைப் பலிகொடுக்கவும் புருஷர்களுக்கு உரிமையில்லையென்று இன்

---

மனத்தந்திகள் வேகமாய் வரும்பொழுது அந்த வேகத்திற்குத் தக்கபடி விரைவாக எழுதிச்சென்றுங்கூட, எழுதி முடிப்பதற்குள் பல மனத் தந்திகள் வந்து நெருங்கி, அவற்றை எழுதுவதன் முன்னர் ஞாபகத்தினின்றும் மறைந்து போய்விடுகின்றன. இவ்விதம் இழந்தது எவ்வளவோ?

ஞெருவர் உளறினுராமே! ஐயோ! வாழ்கிற வீட்டில் கொள்ளி வைத்ததுபோல இவர்களெல்லாம் எங்கிருந்து புறப்பட்டார்களோ! வைதீக வாழ்வுக்கு ஆபத்து வந்துவிட்டதே! திரண்டுவிட்ட பெண்ணைக் கட்டிக் கொள்வதிலும் கல்யாணமில்லாமலே சந்நியாசியாய் இருக்கலாமே! ஆனுல் அப்படி சந்நியாசியாய்ப் போய்விட நமது பையன்கள் ஒப்புவார்களா?

***

**கட்டை மாமி:**—இந்த மசோதாவை நிறைவேற்றி வைத்தவர்கள் அவசியம் நாகத்துக்கே போவார்கள். நல்ல வாழ்வு வாழமாட்டார்கள். முன்போல நமக்கு சாபாநுக்கிரக சக்தியிருந்தால் இப்போதே அவர்களைச் சபித்துவிடலாம்! கல்யாணவயதை உயர்த்தியதிலிருந்து வெள்ளைக்கார தேசத்துக் கிருக்குத்தனங்களெல்லாம் நம் வீட்டுக்குள் நுழைந்துவிடும். இப்போதே நமது பையன்கள் குடுமி வைக்காமல் வெள்ளைக்காரர்களைப் போலத் தலைமிறைய வெட்டிவிட்ட மாதிரியில் வைத்துக்கொண்டு அனுசாரமாய் மாறியிருக்கிறுர்கள். இனிப் பெண்களும் அடக்குவாரற்றவர்களாகி விடுவார்கள்! மனித இயற்கையையும் காமத்தையும் ஜெயிக்க முடியுமா? எவ்வளவோ ராம-நாராயண மந்திரங்கள் ஜெபித்து விரதமிருக்கிற எங்களுக்குக்கூட, அந்தப் பழய காம நினைவுகள் அடிக்கடி வந்துகொண்டு தான் கிடக்கின்றன. உடம்போடு பிறந்த காமம் விட்டுப்போகுமா? திரண்டு பார்வைக்கு லக்ஷணமாய்ப் பக்குவவதிகளாய்ப் பெண்கள் வீட்டுக்குள் இருந்தால் அங்கு இருக்கிற வயசுப் பிள்ளைகளாலேயே அந்தாங்கத்தில் கெட்டுப்போய் விடலாமே! விவாகத்துக்கு முன்னுலேயே பெண்கள் கர்ப்பம் தரித்துப் போகும்படியாகலாமே! அதை மூடிக் கல்யாணம் செய்யும்படியாகி விடுமே! **பத்துக்கு மிஞ்சின பதிவிரதையில்லை** யென்று பழமொழிகூட இருக்கிறதே! பத்து வயதுக்கு மேற்பட்டால் உடனே சாந்தி நடவாவிட்டால் அப்படியப் படித்தானே! கலியாணமான பிறகு அவள் முந்தியே கெட்டுப்போன சங்கதி தெரிந்தாலோ விவாகரத்து வழக்குகள் புறப்பட்டுக் கொள்ளும்! ஒரு கட்டுப்பாடில்லாத ஸ்திரீ புருஷ சம்பந்தமும், குழந்தைகள் பிறப்பதில் அது யாருக்குப் பிறந்ததோ வென்ற சந்தேகங்களும் மூளைத்துக் கொள்ளும். ஆ! இப்படியும் அநியாயம் செய்வார்களா? **இந்தக் கார்த்திகை, தை-மாதத்திலேயே ஆனவரைக்கும் எல்லாக் கல்யாணங்களையும் நடத்தி விட்டால் நல்லது.**

**கோணிக்கால் மாமி:**—ருதுவாவதற்குமுன் விவாகம் செய்யா விட்டால் ஜாதிப் பிரஷ்டம் செய்துவிடுவார்களென்ற பயம் இருப்பதாலே தான் எந்தப்பாடு பட்டாவது பெண்களுக்கு விவாகம் நடந்து விடுகிறது. எவ்வளவு வரதக்ஷிணை கேட்டாலும் கொடுக்கிறுர்கள். அப்பால் சாந்திக்கும் வேறொரு தொகை கேட்க சௌகரிய மிருக்கிறது. இவ்வளவும் இந்தப் புதிய கல்யாண மசோதாவினுலே பாழ்பட்டுப் போகிறது. 14 வயதுக்குப்பிறகு விவாகம் என்றுல் அது திரண்ட பிறகு நடக்கிற விவாகம் தான். அந்த விவாகத்தைப் பிராமணரல்லாதாரைப் போலத் திரண்டு எத்தனை வருஷங்களானுலும் வீட்டுக்

பகற்காலத்துப் பிச்சையைவிட இராக்காலத்துப் பிச்சையை அவசியம் போடுங்கள். காலகதியால் கேவலப்பட்டுள்ள மானஸ்தர்கள் இரவில் பிச்சைக்கு வரலாம். ஒரு பிடி சாதமாவது போட்டனுப்புங்கள். அது மகா புண்ணியம்.

குள் வைத்திருந்து மெதுவாகச் செய்ய எண்ணி விடுவார்கள். அப்போது அவசரம் அவசரமாகச் செய்கிற விவாகம் இல்லாமலே போய் வரதக்ஷிணைக்கும் வழியற்றுப் போய்விடுகிறது. சாந்திக்காக வேறே கேட்பதற்கும் இல்லாமல் விவாகம் நடந்த நாளிலே அதுவும் நடந்து விடுகிறது. அவசரம் என்பது இல்லாமல்ஒதுங்கி விடுகிறபோது யார் பைபையாக மாப்பிள்ளை வீட்டாரின் காலில் கொட்டப்போகிறார்கள்? என் வீட்டுக்காரர் நாலுபையன்களை வைத்துக்கொண்டு அவர்களை உயர்ந்த வரதக்ஷிணை வந்தால்தான் கொடுப்பேன் என்று நேற்று வரையும் சொல்லிக் கொண்டிருந்தார். ஒவ்வொரு பையனாலேயும் குறைந்தது ஆயிரமாவது வந்தால் இந்த ஒட்டு வீட்டை மாடிவீடாகக் கட்டி விட்டுக் கொஞ்சம் நிலங்களும் வாங்கி விடலாமென்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தார். அவர் பட்டிருக்கிற கடன்களுக்கும் இந்தப் பையன்களுக்கு வருகிற வரதக்ஷிணைத் தொகையையே நம்பிக் கிடந்தார். ஐயோ! அத்தனையும் வீணாச்சே! இன்னும் பத்து வருஷங்கள் தாண்டியாவது இந்த மசோதாவைக்கொண்டு வந்திருக்கக் கூடாதா? அதற்குள் எங்கள் பையன்களுக் கெல்லாம் கனத்த வரதக்ஷிணையோடு கல்யாணமாகி விட்டிருக்குமே!

**ஏணிக்கால் மாமி:**—ஆ! இப்படியும் செய்வார்களா? கட்டுச்சாதத்தில் எலிக்குஞ்சை வைத்துக் கட்டினார்களே! கட்டுப்படாத பெண் செட்டுப் போட்டுக் கொண்டல்லவா போகும்? ருதுசாந்தி வயதை வேண்டுமானால் இவ்வளவு வயதில் என்று சட்டம் செய்யலாம். அது மீறினாலும் வெளிக்கு வராமல் வீட்டுக்குள் ரகசியமாய் நடக்கிற சங்கதி. அதிக கஷ்டமில்லை. ஆனால் கல்யாண வயதை இப்படிக் குறிப்பிடலாமா? அதில் மீறினால் ரகசியமாகப் போகாதே. தெரிந்தல்லவா போகும்? கட்டைக் கோணல் அடுப்பில் நிமிர்ந்தது என்பதாய் இப்படியா அக்கிரமம் செய்கிறது? கட்டையிலே வைக்க, பாம்பு பிடுங்க, இப்படிப் பண்ணலாமா? நமது ஸமூகத்திற்குக் கண்டிப்பு கட்டுப்பாடு, தன்னல விருப்பத்தை அடக்கிப்பெரியவர்களின் உசிதப்படி நடப்பது— முதலியவைக ளெல்லாம் வேண்டாமா? பல நூற்றாண்டாக நமது ஸமூகமுறை தாக்கப்பட்ட போதிலும் நாம் நீடித்து வந்திருக்கிறோம். நமது உயர்ந்த லக்ஷியங்களின் காரணமாகவே நாம் நீடித்திருக்கிறோம். இதை அழிக்க முயலுகிறார்களே! சின்னஞ் சிறுவயதில் கல்யாணம் செய்து பார்ப்பது எவ்வளவோ அழகும் ஆநந்தமுமாச்சுதே! அதை எங்காவது கெடுக்கலாமா? இனி நடக்கிற கல்யாண மெல்லாம் உடனுக்குடனே கட்டிலைக் காணுகிற கல்யாணமாகவல்லவா போகும்! சாதாரணமாக இஷ்டப்படி செய்கிற கலியாணத்திற்குக்கூட ஒரு தடுப்புச் சட்டம் முளைத்து விட்டதே!

***

**பொக்கைவாய் மாமி:**—பையனுக்குக் கல்யாணம் நடத்தி விட்டுப் பெண்ணைத் தாய் வீட்டுக்கு அனுப்பி அவளை சம்ரக்ஷிக்கிற விசாரமே யில்லாமல் ஹாயியாக இருந்த காலம் இனி மலையேறிப் போய்விடுமே! கல்

---

"அமிர்த குணபோதினி" அதிகப் பக்கங்களுடன் முதல் முதல் தோன்றிய பிறகேதான் அதைப் பார்த்து மற்றப் பத்திரிகைகளும் தங்கள் பக்கங்களை அதிகமாக்கத் தொடங்கின. K. P. A.

யாணம் ஆனதும் அந்தச் சிறிக்கியை யும் நடுவீட்டில் வைத்துச் செலவிட வேண்டுமே! பெண் வீட்டாருக்குப் பளுவு விட்டுப்போய்த் தூர ஒதுங்கி விடுவார்களே! அவர்களிட மிருந்து சிறுகச்சிறுகக் காலமுழுவதும் கைப் பற்றுகிற வழியும் மூடிப்போகுமே!

***

உரல் மாமி:—பெண்ணைக் கட்டிக் கொடுத்தாலும் நமது வீட்டிலேயே இன்னும் சிலகாலம் இருக்கும் என்று ஆசையோடு நினைப்பதற் கில்லாமல் போய் விட்டதே. கல்யாணமானதும் புருஷன் வீட்டுக்குச் சாந்தி பண்ணி அனுப்பிவிட வேணுமே! ஏதோ பெண்ணுக்குக் கலியாணமாகி விட் டது என்று விசாரமில்லாமல் கிடக் கும்படி சின்னஞ் சிறுவயதிலேயே ஒரு தாலி கட்டி விட்டிருக்க முடியா மற் போச்சுதே! அவளுக்கு 14 வயது கூடுவதற்குமுன் எத்தனையோ நல்ல இடங்கள் தவறிப் போகுமே! ருதுவான பெண்ணை வீட்டில் வைத் துக் காவல்காத்து வயிறெரிந்து பூட் டுப் போட்டுக் கொண்டிருக்க நேரிடு மே! சாகிற தருணத்தில் குழந்தைக ளின் கல்யாணத்தைப் பார்த்துப் போகலா மென்று நினைத்தால்— அந்த 14 வயது வந்துதான் ஆக வேண்டு மென்றல்—இது அநியா யத்திலும் அநியாய மல்லவா? அப் பன் இருக்கும் போதே நல்ல இடமா கப்பார்த்து முடிபோட நினைத்தால் அதற்கும் இந்த வயது எல்லை குறுக் கிட்டுக் கொள்ளுகிறதே! வீட்டுக் காரன் சுடுகாடு போனபிறகு நடக் கிற விவாகமாக வல்லவோ போய் விடும்! நமது இஷ்டம்போல் கல்யா ணம் செய்வதற்கு இடமில்லாமற் போச்சுதே! ஐயோ! இதென்ன இழ வோ! இதென்ன கலிகாலச் சீர்திருத் தமோ! இதென்ன பேரிடி!!

***

ஜெபமாலை மாமி:—பத்திரிகை களை எத்தனை பேரம்மா படிக்கிறார் கள்? இந்தியாவின் பல பாகங்களில் இந்தியா கவர்ன்மெண்ட் கெஜட் டோ, அதில் பிரசுரித்து நிறைவேற் றப்படும் மசோதாக்களோ ஜனங்க ளுக்குத் தெரியாமலே இருக்கின்றன. எவ்வளவோ அனர்த்தங்களும் கண் ணீரும் இந்தச் கல்யாண வயது மசோதாவினால் உண்டாகு மென்று எல்லோரும் அறிந்திருந்தால் அது நிறைவேறும்படி செய்திருப்பார்களா? ஒருக்காலு மில்லை. ஸமூக வழக்கங்க ளில் இப்படித் தலையிடுவது விரும்பத் தக்கதா? நான் என் நாட்டுப் பெண் பெரிய மனுஷியாகவில்லை யென்று தினமும் அரைக்காற்படி வெந்தியத் தை விழுங்கச்செய்து எவ்வளவோ அவசரப் பட்டிருக்கிறேன். அதனால் அவள் 12-வயதில் ருதுவாகி 13-வது வயதில் தங்க விக்கிரகம்போல ஒரு குழந்தையைப் பெற்றுக் கொடுத் தாள். இப்போது அதெல்லாம் நடக்குமா? 14-வயதுக்குப் பிறகு கல்யாணம் நடந்து அதற்குப் பிறகல் லவா காத்துக் கிடக்கவேணும். சீக் கிரம் பேரன் பேர்த்திகளைப் பார்க்க முடியாது போய்விடுமே!

***

பொன்னன மாமி:—ருதுவாவதற்கு முன்னாலேயே மாப்பிள்ளையோடே வைத்தால் அதை ஒரு அருமையாக எண்ணி அவளுக்கு அதிக நகைகள் செய்து போடுவான். பெரிய உத்தி யோகத்திலிருப்பவன் காத்துக் கிடக் காமல் பெண்ணை ருதுவாவதற்கு முன்னாலேயே அனுப்பி விடலாம்.

---

*பெண்கள் எவ்வளவு தாழ்த்தப்பட்டாலும் அவர்கள் ஸ்திரீ மாய்கையை வென்றவர்கள். பிறர்மீதும் தமது மாய்கையை வீசவல்ல மின்னற்கொடிகள்.*

அப்பாலே ஊர் அறிய இன்னொரு சாந்திக் கல்யாணம் நடத்திவிட லாம். இதுவெல்லாம் இப்போது செய்ய முடியாதே. கலியாணத் திற்கே 14-வயது வரை காத்துக் கிடக்கவேண்டுமே! இனி வக்கீல் களுக்கு நல்ல ஸம்பாத்யம் ஏற்படும். போலீஸாருக்கும் கோர்ட்டுகளுக்கும் வெகுவான வேலை அகப்படும். இது தான் கைகண்ட லாபமாக்கும்! ஐயோ! வீட்டு மானம் வெளியில் போகிறதே! ஊர் சிரிக்குமே!

***

மல்யுத்த மாமி—இந்த மசோதா மதவுணர்ச்சியையே புண்படுத்தி யிருக்கிறது. கல்யாணத்தின் புனிதத் தன்மை, ஜாதிமுறை இவற்றையெல் லாம் நாசம் செய்யத் தொடங்கியிருக் கிறது. இந்த மசோதாவில் தண்ட னைப்பிரிவு சேர்க்கப் பட்டிருந்த போதிலும் முன்னைப் போலவே கல் யாணங்கள் நடத்தி வைத்துப் பின் னுக்கு வருகிறதைப் பட்டுக் கொள் ளத்தான் வேண்டும். தேச நலத்துக் காகச் சிறைக்குப் போவது எப்படி அவமான மில்லையோ, அவ்விதமே கலியாணம் செய்து வைத்ததற்காகச் சிறைக்குப் போவதும் ஒரு அவமான மாக மாட்டாது. ஸ்ரீமான் சத்திய மூர்த்தி சொல்வது போல வைதீக வகுப்பினர்கள் தங்களுடைய உண் மையான உணர்ச்சியைத் தெரிவிக்க மசோதாவை மீறி நடந்து அதன் பலனுக்கு உட்பட வேண்டியது தான். என் வீட்டுக்காரர் சிறைக்குப் போகத் தயாராக இருக்கிறார்.

***

பிராமணரல்லாத மாமி:—இனி 14-வயதுக்குட்பட்ட விதவைகளில் லாமல் செய்து விடுகிற இந்த புண் ணிய மசோதாவினால் நல்ல பயன்கள் ஒரு பக்கம் இருக்கிறதுதான். டாக் டர் வரதராஜுலு நாயுடு சொல்வது போல இந்த மசோதாவுக்கு ஓட்டுக் கொடுக்கிற ஒவ்வொரு மெம்பருக்கும் இந்தத் தலைமுறை மாத்திர மன்றி, இனி வரப்போகும் தலை முறைகளும் மிகுந்த நன்றி பாராட்ட வேண்டி யதுதான். இந்தத் தேசத்தில் பால்ய விவாகம் தேசீய அஸ்திவாரத்தையே உயிரற்றதாகச் செய்து வந்திருக்கிற தும் உண்மைதான். ஆனால், பல சிக் கல்களும் இல்லாமலில்லை. தனவா னான ஒருவர் தன் பெண்ணை நெருங் கிய ஒரு பந்துவின் குமாரனுக்கு சிறு வயதிலேயே விவாகம் நடத்திவிட நினைக்கிறார். பையன் பெரியவனா னால், அவன் படிப்பு, செல்வம் இவற் றையெல்லாம் கவனிக்கும்படியாகி பெண் தராமல் உறவு விட்டுப்போக நேருமென்றும், இப்போதே அவன் சிறுவயதா யிருக்கையிலேயே விவா கம் நடத்தி விட்டால் பின்னுக்குக் கேள்வியே ஏற்படாமல் உறவும் தூரப் போகாமல் ஒட்டி நிற்குமென்றும் எண்ணுகிறார். அப்படிச் செய்து விட்டால் இரு குடும்பங்களும் பின் னுக்கு ஒன்று கெட்டு மற்றது வாழ்ந் தாலும் ஒன்றுக்கொன்று சரிப்பட் டுச் சேர்ந்துபோய்ப் பிரியாமலே இருந்து வாழமுடியும். இப்படிச்செய் தால் பிறகு பையன் ஏழையாகி விட் டாலும் அவன் க்ஷேமப் படுவான். இந்த உத்தம நோக்கங்க ளெல்லாம் இந்த மசோதாவால் தடைப்பட்டுப் போய் பெண்ணுக்கு 14-வயது வரு வதற்கு முன் அந்தத் தனவானும் இறந்துபோக, அவருக்குப் பிறகு உள்ளவர்கள் பையனுக்கு அந்தப்

---

"மூத்தவன் பிரிவு மறவாத அச்சிறு காலத்திற்குள் அவன் தம்பியான ஓர் இளங்குமான் பறிபடுவது சகிக்கமுடியாத துக்கம். இது என்ன அநியாயம்!"

பெண்ணைத் தர மறுத்துவிட, எல்லாம் அலங்கோலத்திலும் ஏமாற்றத்திலுமாக ஆகிவிடுகிறது! வீட்டுக்காரரின் நல்ல எண்ணம் நிறைவேறுமலாகி விடுகிறது! தங்கள் குழந்தைகளின் கல்யாணத்தைப் பார்க்கமுடியவில்லையே என்று பல நல்ல தாய்மார்களும் உத்தம குணத் தந்தைகளும் அங்கலாய்த்து வேகாத கொள்ளிகளாய்ச் சுடுகாடு சேர நேரும்! வீட்டுக்குள் சந்தோஷமாக நடக்கிற கலியாணத்திலே வக்கீலும் போலீஸ்காரனும் வரும் விதமாக வழி வைத்து விட்டார்களே! சட்டங்கள் நல்லதாயிருந்தாலும் தவறு வழியிலும் உபயோகப் படுத்தப்படவில்லையா? எத்தனையோ நிரபராதிகள் சிக்ஷையடைய வில்லையா? யானை தன்னைக் கட்டக் கயிறுதானே எடுத்துக்கொடுத்த கதை போலாயிற்றே!

***

இன்னும் மாமிகள் செய்த பிரஸங்கங்கள் அவ்வளவையும் எடுத்துச் சொல்வதென்றால் விகடனாலும் முடியாது; பத்திரிகையிலும் இடமிராது. இனி அறை வீட்டுக்குள் இத்தனை தடவை தான் போக வேண்டுமென்று அதற்குக்கூட இந்தச் சீர்திருத்தக்காரர்கள் சட்டம் ஏற்படுத்தி விடுவார்களோ என்றாள் ஒரு மாமி! இந்த மகா நாட்டில் பிரமாணரல்லாத மாமிகளும் கூடியிருந்தாலும் அவர்கள் 14 - வயதை எதிர்க்கவில்லை. "ஆனால் ஒரு ஆசைப் பெருக்கோடு செய்வதற்கும், ஒரு நல்ல சம்பந்தம் விட்டுப் போகாதிருக்கச் செய்வதற்கும், பிராணன் போகிற நிலையில் கிடப்போர் கண்டு களிப்பதற்குமாக 14-வயதுக்குமுன் தானே கட்டாயமாக ஒரு விவாகத்தைச் செய்ய நேர்ந்தால் அந்த சங்கதியை இந்த மசோதா தடுத்துச் சிறைக்குப்போக வைக்கிறதே என்று தான் வருத்தப்பட்டுப் பேசினார்கள். மொத்தத்துக்கு மாமிகள் பேசியதில் உண்மைகள் சில இல்லாம வில்லை. யோசித்துக் கவலைப்படவேண்டிய கருத்துகளுமில்லாமலில்லை. ஆனால், இந்தக் கல்யாண மசோதாவில் தீமைகளைவிட உத்தம அமிஸங்கள் 100-க்கு 90 பங்கு இருக்கிறதென்பதையும் விகடன் ஒப்புக்கொள்ள வேண்டியே வருகிறது. இந்தப் பால்ய விவாகத்தடை மசோதாவுக்கு இராஜப் பிரதிநிதி தமது சம்மதத்தை 1—10—29-ல் கொடுத்து விட்டதாயும், இச்சட்டம் 1—4—1930-முதல் அமுலுக்கு வருமென்றும் தெரிகிறது. இதன் பலாபலன்கள் எப்படி எப்படியிருக்குமோ! ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!

> அவனுடைய கண் எதை நோக்குகிறது? தான் கெடுத்த பெண்ணும், தன் மனைவியும் பேசிக்கொண் டிருக்கையில், இருவரும் தன் இன்பக் கண்ணாட்டிகள் என்றெண்ணிக் கொண்டு அக்கருத்துடன் அவ்விருவரையும் அவன்கண் நோக்குகிறதாம். இவ்விதமே ஒரு நங்கையையோ, ஒரு பொருளையோ தன்னதாக்கிக்கொள்ளப் பேராவல் கொள்ளுகையிலும் வெகு கூர்மையாய் அந்தக் கபடக் கண் கவனித்து வலையை வீசுமாம்.




கோவில் மதில்களெல்லாம் கருங் கற்களால் கட்டியதுபோல் தேரையும் கருங்கல்லிலேயே தயாரித்திருந்தால் தீவிபத்தில்லாமல் இழுக்கவும் சுலப மாயிருக்குமே என்று விகட முனிவர் விளம்புகிறார் !

***

கலகத்திற்கு அடையாளம் என்ன வென்று ஒருவர் கேட்டதற்கு, ஒரு புறம் கோபிப்பும்—மற்றொரு புறம் எதிர்ப்பும் உதைப்புமென்று விகடன் பதில் சொன்னனம் !

***

பெண்கள் வீட்டுத் திண்ணைக ளில் கூட்டம் போட்டுப்பேசும் வெட் டிப் பேச்சுகளை நிறுத்துவதற்கு அவர் களுக்குள்ளாகவே உண்டாகும் கல கங்கள் வெகு உதவி செய்யுமாம்.

***

கைக்கு வாராத சாக்குகளுக்குத் தான் உடனே தொகை அனுப்பித் தருவிக்கக் கைகள் நீளுமாம். கட னுக்கு வந்துவிட்ட சாக்குகளுக்கோ பணம் அனுப்பப் பல செலவுகளில் முடியாமலே போகுமாம்! தாவும் வருத்தமா யிருக்குமாம் !

***

ஒரு வைதீகரின்மீது சாமி ஆவே சம் வந்து—"அடே! நீ செய்தது சரி; தவறு என்று எண்ணுதே; உன் ஆசை ஸ்திரீ வேறு ஜாதியாயிருந்தா லும் அவளிடம் உனக்குப் பிறந்த குழந்தைகளெல்லாம் உன் குலமே யாவார். அவள் கேட்கிற மச்சம்—முட்டை மாமிசம் எல்லாம் தாராள மாக வாங்கிக்கொடு, நீ மட்டும் அதில் ருசி பார்க்காதே" என்று சொல்லி சாமி மலையேறி விட்டதாம்!

***

தம்பியின் மனைவி கர்ப்பிணியா னல், வெகுகாலமாகக் குழந்தை யில் லாத அண்ணனுக்கும் அவர் மனைவிக் கும் "நமக்கு ஒரு காய் காய்க்கவில் லையே" யென்ற வருத்தம் ஒரு பக்கம் அப்போது தோன்றவே வைக்குமாம் !

***

மதுவிலக்குப் பிரசாரம் தீபாவளி யன்றைக்குமட்டும் செய்யக்கூடா தென்று விகட கவர்ன்மெண்டார் ஒரு சுற்றுத்தரவு அனுப்பியிருக்கிறார்க ளாம் !

***

புரட்டாசி சனிக்கிழமைகளில் கோவிந்தா கோவிந்தா என்று அம் மாத முழுதும் மாமிசம் நீக்கி விரத மிருந்துக் காய்ந்தவர்கள் ஐப்பசி தீபா வளியில் ஒரு ஆட்டை அப்படியே விழுங்கி விடுவார்களாம் !

***

---

தமக்கு வரும் அன்புக்கடிதத்திற்கு அன்பு வார்த்தைகளில் பதில் தராமல், கடிதத்தில் கேட்டுள்ள விஷயங்கட்கு மட்டும் தந்தியடித்ததுபோல் சிலவரிக ளில் பதில் தந்துவிட்டு—அவர்களின் காரியத்தை மட்டும் அனுகூலமாக்கி முடித்து அன்புச்சொற்களில்லாதபடி நின்றுகொள்கிறார்கள். இது ஒரு தினுசு.

தன் மனைவியின் தாய்வீட்டாரது கூட்டம் அடிக்கடி வந்து அதனால் பெருஞ் செலவு நேரிடுகிறதென்று ஒரு ஸம்சாரி விகடனிடம் முறையிட, அதற்கு விகடன், உன் மனைவிக்கும் அவள் தாய்வீட்டினருக்கும் ஏதாவது சண்டை கலகம் தோன்றிக்கொள்ளச் செய்துவிட்டால், அதிலிருந்து அவர்கள் கூட்டமும் வராமல் நின்றுவிடுமென்று பதில் சொன்னானம்!

***

இளையாள் மோகத்தில் அவள் மூத்தவளின் மக்களைக் கொடுமைப் படுத்தும்போதும், தன்ரகசிய வைப்பு ஸ்திரீயாயுள்ள வேலைக்காரியை அவள் வேலை செய்யவில்லையென்று வீட்டுப் பெரியோர்கள் கண்டிக்கும்போதும், தன் வஞ்சகத்தைத் தனக்கு எதிரே எடுத்துக் காட்டும்போதும் எதிர்த்துப்பேச முடியாமல் மௌனமாய் வாயடைத்துப் போக வருமாம்!

---

## பிறகு சிந்தித்து ஏங்கல்.

ஒருவர் மறைந்த பின்னரே அவரது அருமை பெருமைகள் தெற்றெனத் தெரிகின்றன. அவர் தன்னுடன் இல்லாத ஒரு குறைவு தன் நெஞ்சில் எட்டி உதைத்தது போல் தெளிவாக விளங்குகின்றது. அவரது ஆயுட் கடைசி காலத்தில் தம்மை அவர் அற்ப உதவி கோரி வரைந்தனுப்பி நாம் பூர்த்தி செய்யத்தவறி யிருப்பினும், பார்க்க விரும்பி எழுதி நாம் சமயத்தில் போய்ச் சேராவிடினும் அது கூரிய வாள் கொண்டறுப்பதுபோல் நமது ஆயுட்காலம் வரை நம்மை வருத்தும். உயிருடன் இருக்கும்போது அற்ப குற்றங்கள் பிரமாதமாகத் தோன்றுதலும், இறந்தசமயம் கூட இருந்து அற்ப உதவி புரிந்திருப்பின் அது மலைபோல் தோன்றி ஒருவிதமாய் ஆறுதல் தருதலும் உலக இயற்கை. இவ்விதமான ஸம்பவங்கள் ஒவ்வொருவர் ஆயுட் காலத்தில் நடந்தேறுவது சகஜம். நாமும் ஒருநாள் நாம் எதிர்பார்த்த நண்பர்களாலும் அன்பர்களாலும் நெருங்கிய பந்துக்களாலும் இவ்வாறு ஏமாற்றப்படலாம். ஏமாறியும் இருக்கிறோம். காலமுழுதும் உதவிசெய்து ஆதரித்தும் ஒரு சின்ன சங்கதியில் ஏதோ வருத்தத்தால் நாம் சற்று தாமதமா யிருந்துவிட, அதற்குள் உதவி கேட்டவர் கண்மூடிவிட, ஐயோ! கேட்டபடி செய்யத் தவறினோமே என்று வாடி மிகவும் நொந்துகொள்ளுகிறோம். எல்லாம் காலவினையின் சோதனை!

---

"அமிர்த குணபோதினி"யின் மஹத்துவத்தை அது தன்னை வாசிப்பவர்களின் ஹிருதயத்தை மஹத்துவ முள்ளதாக்குவதால் உணரலாம்.




குடியால் கெட்ட குடும்பம்—அல்லது சுப்பம்மாள் :—

[ஸ்ரீமான் ப. சி. கோவிந்தசாமி ராஜா அவர்கள் இயற்றியது. ஆசிரியரின் படத்துடன் கூடியது. விலை அணா 8.]

[ஸ்ரீமான் ப. சி. கோவிந்தசாமி ராஜா அவர்களை நமது பத்திரிகாபிமானிகள் நன்கறிவர். அவர் பல நூல்களின் ஆசிரியர். இனிய கம்பீரமான நடையினர். ஒரு தினத்துக் கட்குடியின் ருசி பிறகு குடும்பத்தையே ஸர்வ நாசமாக்கிவிட்டதை மிக்க சோகபாகமாய் இக்கதை விவரிக்கின்றது. கன்மனத்தையும் கரைய வைக்கின்றது. தீய சகவாசத்தின் தூண்டுதலே குடிக்குக் காரணம் என்பதை இந்நூலகத்து நன்கு விளக்கப்பட்டுள்ளது. சுப்பம்மாள் மதுபானப் பிரியனான தன் கணவனிடம் படும் பாடு பகரொணாது. இந்நாவலை வாசிப்போர் உடனே தமது குடிப்பழக்கத்தை யொழித்து நல்ல புத்திமதிகளைப் பெறுவார்களென்பது திண்ணம். கதையின் கற்பனை சுயமாயும் சிலாகிக்கக்கூடியதாயும் இருக்கிறது. இயற்கையழகு பொருந்தியதாய் நடந்தவண்ணம் கூறுவதாகும். அனைவரும் வாங்கி வாசித்தற்கேற்ற சிறந்த படிப்பினைகளுள்ள நாவல்.

***

பிரஸவ காலத்தில் செய்யவேண்டிய முதல் உதவி :—

[ஹானரபில் டாக்டர் யூ. ராமராவ் அவர்கள் இயற்றியது. படங்களுடன் கூடியது, விலை அணா 6.]

முக்கியமான சரீர அமைப்புகளின் விவரங்களும், கருதரித்தவுடன் நடந்துகொள்ளவேண்டிய விதங்களும், பிரஸவத்திற்கு முந்தியும் பிந்தியும் நடைபெறவேண்டிய முறைகளும், சிசுக்களைப் பராமரிக்கும் வழிகளும் எளிய நடையில் வெகு தெளிவாக எழுதப்பட்டுள்ளன. சுருக்கமாகவும், சங்கிரகமாகவும் மனதில் நன்கு பதியும்வாறும் விளக்கப்பட்டுள்ளன. அபாயகரமான சந்தர்ப்பங்களில் டாக்டர்களைத் தருவிக்க வேண்டியதின் அவசியத்தை குறிப்பிட்டுவிட்டு, அதற்குமுன் செய்யவேண்டிய சிகிச்சைகளை இந்நூலில் தெரிவிக்கப்பட்டிருப்பதால், ஒவ்வொரு பெண்மணியும் இந்நூலை வாசித்தறிவது நலமாகும். பெரிய நூல்களைவிட சிறிய நூல்கள் அதிகமாக வேலைசெய்யும்.

***

புத்தமார்க்க வினாவிடை :—

[ஸ்ரீ கௌதம புத்தபிரானின் படத்துடன் கூடியது. ஸ்ரீமான் கே. கோவிந்தப் பிள்ளை யவர்களின் வாக்கு. விலை அணா 3.]

இது பாளி பாஷையின் மொழிபெயர்ப்பு. வினாவிடை ரூபமாய் புத்தபிரானின் சரிதையை ஆதிமுதல் அந்தம்வரை விளக்குகின்றது. சிறுவர்க்கும் பாடசாலைகட்கும் பயன் தரும். வாசித்துப் பார்ப்பவர்க்கே அதன் அருமையும் நூற்பயனும் விளங்கும்.

[இப்புஸ்தகங்கள் "அமிர்தகுணபோதினி" ஆபீஸில் விலைக்குக் கிடைக்கும்.]




## Letter XX.

(*From a country Farmer, on the same occasion.)*

*Honoured Sir,*

I am extremely sorry that through a variety of unforeseen accident, I am obliged to write to you on such a subjects as this. The season last year was bad, but I was enabled to pay you. This has turned out much worse, and it being so long before we could get the corn home, it is not yet fit to be sold. I only beg your patience about two months longer, when I hope to pay you faithfully, with gratitude.

I am, Sir,

Your honest tenant,

and humble servant,

*Venugopalan.*

## 20-ம் கடிதம்.

(நாட்டில் ஒரு குத்தகைக் காரன் அந்தக் குத்தகைப் பணத் தாமதத்திற்கு எழுதியது.)

கனம் பொருந்திய ஐயா,

நினையாத பல இடையூறுகளைப் பற்றி இதன் அடியிற் சொல்லும் சங்கதியைக் குறித்து உங்களுக்கு எழுத உடன்பட்டது எனக்கு விசனமாயிருக்கின்றது. சென்ற வருஷம் மழையில்லாதிருந்தாலும், உங்களுக்குப் பணம் கட்ட எனக்கு நிருவாகமிருந்தது. இவ்வருஷம் பின்னும் கெடுதியாகித் தானியத்தை யறுத்து வீட்டில் கொண்டுவந்து சேர்க்க இத்தனைநாட் சென்றதால் இன்னும் அது விற்பனைக்குத் தகுந்ததாகவில்லை. ஆகையால் இன்னும் இரண்டு மாதம் மாத்திரம் நீங்கள் பொறுத்திருக்கவேண்டிக் கொள்ளுகிறேன். அப்போது உங்களுக்கு விசுவாசத்துடன் பணத்தைச் செலுத்த நம்பியிருக்கிறேன்.

இப்படிக்கு ஐயா,

நன்றியறிந்த தன்மையோடு உங்களுக்கு விசுவாசமுள்ள குத்தகைக்காரனும் வணக்கமுள்ள ஊழியக்காரனுமாகிய, வேணுகோபாலன்.

---

எவ்வளவு பணம் தந்து, சம்பளம் தந்து நமது பக்கத்தில் ஒருவரை இருக்கும்படி செய்தாலும், நாம் பெற்ற குழந்தை, நம்முடன் பிறந்த பிறப்பு அருகில் இருப்பதுபோலவும் நம்முடன் சுற்றி நிற்பதுபோலவும் வருமா ?

---

சாமான்கள் அனுப்பிப்பெறுகிற ரயில்வே பாஸில் 15-அணா என்றுள்ளதை ரூ. 1—5—0 என்று சொல்லி சில சமயங்களில் வாங்கிவிடுகிறார்கள்.

# சென்றமாதம்

## யதீந்திர நாத் தாஸின் ஒப்பற்ற தியாகம்.

"பாக்கியத்தால் இன்றேன்— யாக்கையைப் போக்குகின்றேன்" என்று அந்நாளில் சீதையைக் காக்க முயன்று பிராணனை விட்ட ஜடாயு கூறினாரெனினும், இன்று அவரைப்போலவே யதீந்திர நாதா! நீயும் மகத்தான தியாகம் செய்து பொய் யுடலை நீத்தாய். உனது லாகூர் சிறை வாசத்தில் இராஜீயக் கைதிகள் சிறையில் படும் துன்பமொன்று மட்டும் உனக்குத் தோன்றியதே யன்றி உன் துன்பம் உனக்குத் தெரியவில்லை. அன்னார் படும் கஷ்டங்களை நிவர்த்திக்கக் கேட்டு, அது தீரும் வரை உண்ணா விரதமிருப்பதென்று தீர்மானித்து விட்டாய். ஆ! உனது வைராக்கியத்தைக் கடைசிவரையிலும் 63-நாட்களளவும் உணவேயின்றிக் கிடந்து சாதித்து விட்டாய். பட்டினி கிடந்து அங்குலமங்குலமாக இறந்தாய். இத்துணைத் தியாக புத்தியை எற்ற நீயோ சின்னஞ் சிறுவன். நீ பிறந்தது 1904-ம் வருஷமாகில் நின் பருவமோ 25 தான். நீ ஜனித்தது கல்கத்தாவில். உனது அந்தியமோ லாகூர் சிறையில்! உனது மயான பூமியோ மறுபடியும் கல்கத்தாவில்! 17-வது பருவத்தில் (1921) ஒத்துழையாமையிற் கலந்து கலாசாலையை விட்டு அது முதல் தேச சேவையை எற்றுப் பல முறை சிறை சென்றாய், திரும்பினாய். மறுபடியும் சிறை! கடைசியிலும் சிறை! அங்கேயே பூர்த்தி! யதீந்திர நாதா! நின்னைப் பாரதஞாலம் மறவாதால்.

***

## அடிவேரை வீழ்த்தாமல் கிளையை வெட்டுதல்!

"கட்டி வைத்த பணத்தைத் தட்டிப் பறித்தாற்போல" எளிய ஜனங்களின் பணத்தைக் குதிரைப் பந்தயங்களும், லாட்டரிச் சீட்டுகளும் கொள்ளை கொண்டு விடுகின்றன. லாட்டரி விழாதவர்கட்கு அது விழவில்லை யென்று கூடச் சொல்வாரில்லை, தெரிவிப்பதுமில்லை. இங்ஙனம் 'விழாத' வரின் தொகைதான் லாட்டரிக்கு லாபம். ஏமாந்தவர் பணம் பறித்த லாட்டரிச் சீட்டினர் சிலருக்குக் கண்ணைத் துடைத்துவிட்டு வந்த வரவைச் சுருட்டிக்கொண்டு போய்விடுகிறார்கள். இனி, குதிரைப் பந்தயமோ அந்த டிக்கட்டுகளை விற்கும் கடைகளால் எங்கும் 'தமுக்கு' அடிக்கப்படுகின்றன. இந்தக் கடைகளின் பெருக்கால் ஜனங்கள் குதிரைப்பந்தய டிக்கட்டுகள் வாங்கி ஏமாறும்படி நேருகிறதென்று இக்கடைகளைக் குறைக்க லைசென்ஸ் ஏற்படுத்தும் ஒரு புதிய சட்டத்தை சென்னையரசினர் செய்துள்ளார். குதிரைப் பந்தயமே மூலாதாரமான தீமையாக, அதை நிறுத்தாமல் அந்த டிக்கட்டுகளை விற்கும் கடைகளுக்கு லைசென்ஸ் விதிப்பதிலும், மதுக்கடைகளை ஒருபக்கம் எலம் போட்டுக்கொண்டு, மற்றொரு பக்கம் மதுவிலக்குப் பிரசாரம் செய்ய முற்படுவதிலும் யாது பயனோ? அடிவேரை வெட்டி வீழ்த்தாமல் கிளையை மட்டும் வெட்டுவதால் மரம் பட்டுவிடுமா?

***

**விடுதலை கண்ட தேச பக்தர்கள்.**

"குடி இருந்து அறி, வழி நடந்து அறி" என்பது போல, சிறை வாசத்தின் இயல்பையும் தெரிந்து கொண்டு விட்டு விடுதலை பெற்ற தேசபக்தர்களான ஸ்ரீமான்கள் எம். எஸ். சுப்பிரமணிய ஐயர், நைனியப்ப பிள்ளை இவ்விருவரும் சென்னையில் மிக்க வைபவமாக வரவேற்கப்பட்டு கடற்கரையில் பிரசங்கமும் நடந்தேறியது. இதில் வியப்பு என்னவெனில், சிறைபோகாமலே சாதுர்யமாய் எதிலும் சிக்கிக்கொள்ளாதபடி தந்திரமாகத் தங்களை எச்சரிக்கையோடு தப்ப வைத்துக்கொண்டு சிறை சென்றவர்களுக்கு மங்களம் பாடிப் பெருமை பெறுகிறார்களே! அதுதான் பெரிய சாமர்த்தியம்!

***



ஸர்தார் வல்லபாய் படேல்.

**நடந்துபோன மாகாண மகாநாடு.**

"ஆற்று மணலிலே தினம் புரண்டாலும் ஒட்டுகிறதுதான் ஒட்டும்" என்பதற்கிணங்க, சென்ற 31-8-29-ல் வேதாரண்யத்தில் கூடிய 33-வது தமிழ் மாகாண மகாநாடும் அதற்கு முன்பு கூடிய மகாநாடுகளைப்போலவே இரண்டு தினத் துத் திருவிழாவாக முடிந்துவிட்டது. அம்மகாநாட்டின் அக்கிராஸனரான ஸ்ரீ ஸர்தார் வல்லபாய் படேல் அவர்களின் வீர உரை போற்றற்பாலது. அவற்றில் சில குறிப்புகளை இங்கு தருகிறோம். * * * சூரத்தனத்திற்கு மேல் சூரத்தனமான தீர்மானங்களைச் செய்ய நாம் துடிக்கிறோம். ஆனால் வேலை எதையும் செய்யமாட்டோம். ***ஒற்றுமை வேண்டுமென்று கூச்சல்போடுகிறோம். ஆனால் அதற்காக ஒன்றும் செய்யமாட்டோம். சம்பீரமான பேச்சும் தீர்மானங்களும் சம்பீரமான செய்கையாய் விடுமென்று மதிமோசம் போகிறோம்.***நம்முடன் பிறந்து வளர்ந்தவர்கள் உள்ளே நுழையக் கூடாதானால், நமது கோவில்களில் ஆண்டவன் நுழைய மாட்டான். *** புரோகிதர்களால் விதிக்கப்படும் பழக்க வழக்கங்களைப் பற்றிக் கலகம் செய்வது சகஜம்.***

***

**மகாத்மா காந்தி வாழ்க.**

"வாழ்க எம்மான்" என்று பாரதியார் மகாத்மாவைக் குறித்துப்பாடினார். மகாத்மாவின் சஷ்டி பூர்த்தித் திருநாளை 2-10-29-ல் கொண்டாடிப் போற்றினர். மகாத்மா இன்னுமோர் அறுபது வருடகாலம் வாழ்ந்திருந்து

இந்தியத்தாயின் விடுதலையைக் கண்டு களிப்பாராக. இந்தியாவில் இந்நாளில் தோன்றியுள்ள புது ஜீவன் மகாத்மாவால் எழுப்பப்பட்டதே யாகும்.

உலகத்தில் உழைப்பில்லாமல் எந்தக் காரியந்தான் செய்யக்கூடும்? பிள்ளைகள் விளையாடுகிறார்களே; அது உழைப்பில்லாமல் ஆகின்றதா? பெருத்த லாபத்தைக்கோரிப் பல காரியங்கள் செய்கிறார்களே; அவையெல்லாம் உழைப்பில்லாமல் உண்டாகிறதா? உயர்வும் இழிவும் வேலைசெய்கிறவனுடைய திறத்தைப்பற்றியதே யொழிய வேலையைப்பற்றியதன்று. நாவிதனின் வேலை இழிவல்ல; நன்றாக க்ஷவரம் செய்யத் தெரியாததே இழிவு.

**இராக்கின் விடுதலை.**

"இராப்பட்டினி கிடந்தவன் உரித்த வாழைப்பழம் விற்கிறதா? என்று கேட்டதுபோல" அந்தந்த நாடும் தனது விடுதலைக்கு அவசரப்படுகிறது. அவ்விதம் அவசரப்பட்ட எகிப்து நாடு விடுதலை கொண்டதுபோல், இப்போது இராக் என்ற நாடும் தனது தீவிரத்தைக் காண்பித்துக்கொள்ள, அதற்கும் விடுதலை உதயமா யிருக்கிறது. இது பாரஸீகத்திற்கும் அரேபியாவுக்கும் மத்தியிலுள்ள ஒரு முஸ்லிம் நாடு. இது ஆதியில் துருக்கியின் சுவாதீனத்திலிருந்து, பிறகு பிரிட்டிஷாரின் மேற்பார்வைக்கு வந்து, எண்ணிலாக் கஷ்டங்களுக்குப் பிறகு இப்பொழுது சுவாதீன நாடாகத் தொடங்கி யிருக்கிறது. பிரிட்டிஷாரும் அவ்விதமே செய்ய ஒப்புக்கொண்டுவிட்டனர். இந்தியா ஒன்றுதான் ஓயாத பிரிவினையில் கிடந்து நாறுகிறது!

---

## வீண் நினைவு.

பெண்ணே! உன் கேசங்கள் குட்டையா யிருக்கையில் அதனோடு ஒட்டுப்போட்டு ஜடையிட்டுக்கொண்டு அதன் நீளத்தைப் பார்த்துப் பூரிப்பதினாலேயே அது உன் கேசமாய் விடுமா? இரவல் சதமா? உன்னைப்போலவே அவருடைய இவருடைய சொத்துக்களெல்லாம் தன்னைச் சேருமென்று மனோராஜ்யம் செய்துகொண்டு பிறகு ஏமாற்றம் கண்டவர் எத்தனை பேரோ! உனக்கென்று ஒட்டி இப்போது உன் கையில் உள்ளதுதான் உன் சொந்தமான பொருள். அது உன் கையை விட்டுப் போகாதபடி பார்.






தீபாவளி வியாபாரத்திற்காக இன்று கூடிய நமது கடையில் புதிய ஜவுளிகள் சென்ற வருஷத்தைவிட அதிகமாகத் தருவிக்கவேண்டுமென்று தீர்மானமானது. அதில் பழய மீந்த சரக்குகளை முதலில் விற்றுத் தீர்த்துவிட்டுப் பிறகே புது சரக்குகளைத் தொடவேண்டுமென்று ஏகப்பசெட்டி கூறினார். எவ்வளவு கேடுகெட்ட துணியானாலும் சாயம் போகாதென்று காலைமுதல் மாலை வரையில் சத்தியங்கள் செய்வதற்குப் புதிதாக இருவரைச் சம்பளத்திற்கு அமர்த்தவேண்டுமென்று மெய்யப்பக்கோன் மொழிந்தார். துணிமணிகளைப் பார்க்கவருகிறவர்களில் முக்கியமாய்ப் பெண்கள் பக்கம் பிரீதியாய்ப் பேசி வெகுவாய் விலைகுறைத்துச்சொல்வதுபோல் நடித்தால், பெண்களின் இஷ்டப்படியே தான் அவர்களுடன் கூடவரும் ஆடவர்களும் ஆடவேண்டுமானதால் வியாபாரம் நன்றாக நடக்கும் என்று இருமல்பிள்ளை இயம்பினார். அத்துடன் தொடர்ந்து வரும் குழந்தைகளையும் தடவிக்கொடுத்து அவர்களுக்குப் பொம்மை போட்ட காகிதங்களையும் தந்துவிட்டால் நமது கடையிலேயே வந்தவர்கள் எல்லா ஜவுளிகளையும் வாங்குவார்களென்றும், குழந்தைகளை மயக்குவதில் தான் பெரியவர்களும் மயங்குகிற சக்தி அதிகமிருக்கிறதென்றும் விருத்தாஜநதேவர் விளம்பினார்.

***

நமது கடைக்கு வந்தவர்களை ஜவுளிவாங்குவதுடன் மட்டும் விடக்கூடாது; நமது கடையிலுள்ள தையற்காரக் குடிகார பங்காரு நாயுடு விடமே எல்லாத் துணிகளையும் கொடுத்து தைத்துக்கொள்ளும்படியும் தூண்டவேண்டுமென்று பக்கிரியா பிள்ளை பகர்ந்தார். சாதாரணச் சீட்டு வகைகளில் அதிக துணியைக் கத்தரித்து எடுக்கவேண்டியதில்லை யென்றும், பட்டுத்துணிகளில்தான் முக்கியமாய்க் கை வைக்கவேண்டுமென்றும், அதிகமாக எவ்வளவு கஜம் துணியைக் கொடுத்தாலும், 'சரி, இது இரண்டு பாவாடைக்கு வரும், இதில் ஒரு ரவிக்கையாகும், இதில் இரண்டு சோக்காய்தான் தைக்கலாம்' என்று மொத்தமாகக்கூறி, எல்லாம் தைத்த பிறகு அதன் சொகுசையும் நேர்த்தியையும் பாருங்களேன் என்று சொல்லி மொத்தமொத்தமாய்த் துணிகளை அப்படியப்படியே அமுக்கிக் கொண்டால் அதில் தான் விசேஷித்த லாபமும் துணி மிச்சமும் இருக்கிற

---

"தெரு" என்பதற்கு இரண்டு கருத்துக்கள் இருக்கவேண்டும். முதலாவதாக, அது ஒரு பொது இடமாக இருக்கவேண்டும். இரண்டாவதாக, ஒரு பாதையாய் முக்கியமாக உபயோகப்படுத்தப்படுவதாக இருக்கவேண்டும். இப்படி இருந்தால்தான் அது 'தெரு" ஆகும்.

தென்று இருதையா பிள்ளை இசைத்தார். வருகிறவர்கள் ஒவ்வொருவருக்கும் வெற்றிலைப் பாக்கும் குழந்தைகளுக்குப் பிஸ்கோத் பெப்ரமிட்டும், இன்னும் விசேஷமாய் ஜவுளி வாங்குகிறவர்களுக்கு சோடா—லிமினெட்—கலர் உபசாரங்களும் நடத்தினல் வியாபாரம் அதிகமாகுமென்றும், ஒரு பெரிய பந்தலும், ஸ்பெஷலாக ஒரு பெரிய போர்டும் போட்டு இரண்டு அழகான பொம்மைகளையும் வெளியில் நிறுத்தி வைக்கவேண்டுமென்றும், அப்போதுதான் பழைய தொளதொளத்துப்போன மிச்சச் சரக்குகள் சீக்கிரத்தில் விலையாகி விடுமென்றும் தொந்திப் பிள்ளையார் தொடர்ந்து கூறினர்.

***

நமது கடையைச் சேர்ந்த லேவாதேவி பாங்கியில் தீபாவளிக்குக் கையில் பணக்குறைவு படுகிறவர்களின் வீட்டு நகைகளெல்லாம் அடகுக்கு வருமாகையால், அதிலே கல்லிழைத்த நகைகளைக் கருங்கல் இழைத்த நகைகளென்றெண்ணி, அதில் ஒட்டியிருக்கிற தங்கத்துக்குமட்டுமே மதிப்புப் போடவேண்டுமென்றும், மதிப்பும் 100-க்கு 30-வீதமாகவே இருக்கவேண்டுமென்றும், வெள்ளி நகைகளை வாங்கக்கூடாதென்றும், வெகு முறுக்கும் கண்டிப்பும் காண்பித்து நடக்கவேண்டுமென்றும் காதர் பாஷா பகர்ந்தார்.

***

நமது கடையைச் சேர்ந்த எண்ணெய்க் கடையில் கடலை எண்ணெயில் எவ்வளவு நல்லெண்ணை கலப்பதென்றும், இது ஜலத்திலே எவ்வளவு பால் கலப்பதென்று பாற்காரன் அளவிடுவதுபோல் இருக்கவேண்டுமென்றும், அதில் கைதேர்ந்தவர்களைத் தருவித்து அமர்த்தவேண்டுமென்றும் வாணியச்செட்டியார் கூறினர். நமது கடையிலுள்ள பல சரக்குக் கடையில் சரக்குகளின் விலையை இப்பொழுதே உயர்த்திவிடவேண்டுமென்றும், நெய் டின்களை அன்றன்று விற்பனைக்கு வேண்டிய அளவுக்கு முருங்கையிலை போட்டுக் காய்ச்சி விற்கவேண்டுமென்றும், அப்பொழுதுதான் நெய்யிலுள்ள நாற்றம் தெரியாதிருக்குமென்றும், கடைச் சாமான்களை அவரவர்களின் வீட்டிற்குத் தூக்கிக்கொண்டுபோய்க் கொடுத்து வர அதிகமாய் மூன்று ஆட்களை நியமித்துவிட வேண்டுமென்றும் கருப்பையா கூறினர்.

***

நமது கடையில் சென்ற வருஷத்துப் பட்டாசு மத்தாப்புச் சரக்குகள் அதிகமாய்த் தங்கி விட்டபடியால், இவ்வருஷத்திற்குக் கொஞ்சமாய் புது சரக்குகள் தருவித்துக்கொண்டு விட்டால் போதுமென்றும், முக்கியமாய்ப் பழைய சரக்குகளை விலைப்படுத்திவிடப் பார்க்கவேண்டுமென்தும், போன வருஷத்திய நஷ்டத்தை இந்த வருஷத்தில் சரிசெய்து விடவேண்டுமென்றும், ஒரு பட்டாசுக் கட்டில் நாலு பட்டாசு சத்தம் கேட்டால் போதுமென்றும், ஆனல் கடைக்கு வெளியில் அடிக்கடி சுட்டுக்காட்டுகிற பட்டாசுக்கட்டுகள் மட்டும் புதுச்சரக்காய் இருந்து நன்றாக சத்தம் கேட்கவேண்டுமென்றும், பத்துப் பழைய பட்டாசுக் கட்டுகளுடன் ஒரு புதுக் கட்டையும் மனமொப்பிச் சேர்த்துக் கொடுத்து விடவேண்டுமென்றும், மத்தாப்புப் பெட்டிகளில் பெட்டிக்கு நாலு

---

"தியாகத்தையும், கஷ்டத்தைஏற்றுக்கொள்ளுவதையும் அஸ்திவாரமாக வைத்துக்கொண்டு நடத்தும் போராட்டத்தினுல் தான் என்றும் நிலைத்திருக்கக்கூடிய சுதந்திரக்கோட்டையைக் கட்டலாம்." சர்தார் வல்லபாய் படேல்.

குச்சிகளை எடுத்துவிட வேண்டுமென்றும் நல்ல தம்பி நவின்றார்.

***

இந்த மோசக்காரப் பண்டாரங்களையெல்லாம் நமது கடைக்குள் ஏன் வரவிட்டீர்களென்றும், இவர்களெல்லாம் நமது கடையின் நற்பெயரைக் கெடுக்கிற தூர்த்தர்களென்றும் அல்லாபிச்சை எதிர்த்துப் பேசினார். அதற்குப் பக்கவாதம்பிள்ளை எவ்வளவோ பெரிய மனிதர்கள் காங்கிரஸின் பெயரை உபயோகித்துத் தனவந்தர்களானார்களென்றும், தேசாபிமானத்தின் பெயரை வெளியிலிழுத்து விட்டுக்கொண்டு எவ்வளவு பேர் சொந்த லாபம் தேடிக்கொண்டார்களென்றும், எவ்வளவு பேர் பொது நலத்திற்குப் பாடுபடுவதாக நடித்துத் தங்களுக்குப் பிழைப்பைச் சம்பாதித்துக் கொண்டார்களென்றும், எவ்வளவு பேர் வெளிக்கு நாணயஸ்தர்கள் போல் காண்பித்து உள்ளுக்குப் பக்கா நரிகளா யிருக்கிறார்களென்றும் திருப்பிக் கேட்டார். உடனே தாண்டவக்கோன் எழுந்தார். "எல்லோருமே மோசக்காரர்களல்ல — சுயநலஸ்தர்களுமல்ல. நல்லோர் எங்கும் இருக்கிறார்கள். அக்கிரமக்காரர்களின் சங்கதி நமக்கு வேண்டாம். இந்தத் தீபாவளியில் எவ்வளவோ மோசங்கள் நடக்கும். இந்த சமயத்தில் நமது கடையில் யாவும் நாணயமாய் நம்பிக்கைக்குரியதாய் வியாபாரங்கள் நடத்தி ஜனங்களுக்கு நன்மை செய்வதே பெரிய உபகாரமாயிருக்கும். அது நமது கடையின் நற்பெயரையும் காப்பாற்றும்" என்று கூறினார். இதைக் கடையின் முக்கிய அங்கத்தினர்களனைவரும் ஆதரித்துப் பேசவே, மோச பித்தலாட்டங்களைக் குறித்துப் பிரசங்கங்கள் செய்தவர்கள் வெட்கிக் கடையை விட்டு வெளியிற் சென்றுவிட்டனர். தீபாவளியில் கதரையே முக்கியப் பொருளாய் விலைப்படுத்த வேண்டுமென்றும், பழைய இருப்புப் பட்டாசுக் கட்டுகளை வியாபாரிகளுக்கு நயமான விலையில் தள்ளிவிட்டுப் புதிய சரக்குகளைத் தருவித்துவிட வேண்டுமென்றும், **குழந்தைகள் ஏமாறிப்போகும்படி மோசம் செய்வது பாவமென்றும்** முடிவு செய்யப்பட்டது. எவ்வளவுக்கு உத்தம அம்ஸங்கள் நமது கடையில் பொருந்தி யிருக்கவேண்டுமோ அவ்வளவுக்கும் பிரயாசை எடுத்துக்கொள்வதென்றும் ஏகமனதாய்த் தீர்மானமாயிற்று. தீபாவளி மாதமானதால் மற்றப் பொதுவான பிரசங்கங்களுக்கு நேரமில்லாமல் இவ்வளவுடன் நமது கடை பூர்த்திபெற்றது.

'பஹதூர்' பொன்வண்டுசெட்டியார்,


சொத்து சேர்ப்பது சரிதான். நகையாகச் செய்யின் தனக்குப் பிறகு தாயாதிகள் வரின், தன் மனைவி தனக்கு இட்ட நகை தன்னதென்பாள். சொத்து தாயாதிகள் வசமாகலாம். நகையாவது அவளுக்கு மிச்சமாகட்டுமென்று அக்கருத்துடனும் நகைகள் செய்ய வேண்டி வருகிறது. பணம் தேடுவதைவிட அது பிறர் கையில் சிக்காமல் தன்னவர்களைச் சேரும்படி செய்வது அதைவிட முக்கியமாகிறதா. இன்று சிரித்துக் குலாவிப் புசித்தவர்களே நாளைக்கு நம் எதிரிகள்!

# தீபாவளி.



தீபாவளி பண்டிகை கார்காலத்தில் கார்த்திகைமாதம் தொடங்குமுன் கொண்டாடப்படுகின்றது. கணித சாஸ்திரப்படி ஐப்பசி மாதத்து அமாவாசை முதல் கார்த்திகை மாதம் தொடங்குகின்றது. தீபாவளி இங்ஙனம் கார்த்திகை மாதம் தொடங்குவதற்கு முந்திய தினங்களிலேயே நெருங்கி வருகிறது. கார்த்திகை மாதத்தில் விளக்கு வைக்கும் வழக்கம் நம் நாட்டில் தொன்று தொட்டுள்ளது. தீபாவளி பண்டிகை கார்த்திகை விளக்கின் தொடக்கமே.

ஐப்பசி மாதத்தில் கார் அறுவடையாகி புதுத் தானியங்கள் நிறைந்துவருகின்றன. ஆறுமாதம் கடும் வேலைசெய்து விதைத்து அறுத்து வீட்டிற்குக் கொண்டுவந்த தானியக் குவியல்களை விருந்தோடருந்த ஐப்பசி மாதத்தில் வரும் தீபாவளியைத் தெரிந்தெடுத்துக் கொண்டனர். கார் அரிசி பணியாரங்களுக்கு மிக்க சுவை கொடுப்பது. அந்த அரிசி சாதத்திற்கு அவ்வளவு ருசி தராது. தீபாவளியன்று முக்கியமாகப் பலவித பணியாரங்களையே அருந்துதல் கார் அரிசியின் சுவையை யுணர்வதற்கே.

“நாலேழ் நாள்” கொண்டாடிக் கொண்டிருந்த ‘இந்திர விழா’ இப்பொழுது ‘போங்கல்’ ‘போகி’ எனச் சங்கிராந்தி பண்டிகையாக இரு தினங்களோடும் முற்றுப்பெறுகின்றது, கங்கா தேவியை வணக்கம் செய்யும் புது நீராட்டு இப்பொழுது ‘பதினேட்டாம் பெருக்’காகி விட்டது. அவ்விதமே தீபாவளியும் ‘நரக சதுர்த்தசி’ யாயிற்று.

பழந்தமிழர் தேக சுகத்துக்காகவும், சந்தோஷமடைவதற்காகவும் தீபாவளியை நாட்டுத்திருவிழாவாகக் கொண்டாடுவதாயினர். தீபாவளி பண்டிகையில் நம்கழனியில் விளைந்த தானியங்களுக்கும், பழங்களுக்கும், காய்கறிகளுக்கும் ஒரு தனி ருசி ஏற்படுகின்றது. அவ்விதமே நம் நாட்டுப் பஞ்சால், நம் நாட்டாரின் கைகளால் நூற்று நெய்த கதருக்கும் ஒரு தனி அழகு உண்டாகிறது. இது உண்மையன்றோ? அவ்வாறிருக்க, பின் ஏன்நீங்கள் கதர்வாங்குவதில்லை?

K. C. பிச்சுமணி ஐயர்.

## தீபாவளி! தீபாவளி!!

தீபாவளியில் கதர் அணியுங்கள். மது மாமிச நாற்றங்களை விலக்குங்கள். உங்களைச் சேர்ந்தவர்களுக்கும் வேலையாட்களுக்கும் துணிமணிகள் வாங்கிக்கொடுங்கள். பட்டாசு முதலியன சுடும் குழந்தைகளின் பக்கம் காவலாய் நில்லுங்கள். இது முக்கிய சங்கதி. யாவும் சித்தமாகி உண்ணப் புகும் சமயம் சண்டை, சச்சரவு, வாய்த்துடுக்கு வேண்டாம்.

“அமிர்த குணபோதினி” பிரஸ், 302, தங்கசாலைத் தெரு, சென்னை.